உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீமந் நடராஜப்பெருமான் திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4] மார்கழி [பகுதி 3


### பொன்னை இழுக்கும் காந்தம்

அடியவர்களை ஞானாசிரியன் காந்தமாக ஈர்க்கிறான் என்றால் அடியவர்கள் இரும்புகளா? என்னும் இச்செய்தியைப் பண்டார மும்மணிக்கோவை 16ஆம் பாடல் மூலம் விளக்கியருளுகிறார்கள் ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்.

சாஸ்திர விளக்கப் பகுதியில் 'சிவப்பிரகாசம்' விளக்கத்தைத் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் தொடங்கியுள்ளார்கள்.

இளம் எழுத்தாளர்களின் மூன்று கட்டுரைகள்:- வேண்டாமை, மாதொருபாகன், சிவ பாதாதிகேசம்.

திரு. இராசமாணிக்கம் அவர்களின் சோதிடக்கலை பற்றிய கட்டுரை.

விடையரங்கத்தில் மூவரின் விடைகள்.

மற்றும் வழக்கமான - திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்களின் அட்டைப்பட விளக்கம், நூல்நிறை, திரு. வன்மீகநாதன் அவர்கள் வழங்கும் லவட்ஸு வின் அறவுரை, திரு. தி.கி. நாராயணசாமி நாயுடு அவர்கள் கணித்தளிக்கும் திருக்கணித பஞ்சாங்கம் முதலியன இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ-ர்

### ஸ்ரீ காசிமடம் நூல்களை விலைக்குப் பெறுவது எப்படி?

பன்னிரு திருமுறைகள், சாஸ்திர நூல்கள், பெரியபுராணம் உரை நடை, திருவிளையாடற்புராணம் உரைநடை (முதற்பகுதி), பிற தோத்திர நூல்கள் ஆகியவற்றைப் பெற விரும்புவோர்,

மேலாளர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் அ.கு.எ. 612 504 என்ற முகவரிக்கு மட்டுமே பணவிடை, வங்கி உண்டியல்கள் அனுப்புதல் வேண்டும். ※புத்தகத்தின் விலையுடன் அஞ்சல் செலவிற்கான தொகையும் அனுப்புதல் வேண்டும்.

அடுத்த விடையரங்கத்திற்கு வினா:-

''மூன்றடுக்கு நாககங்கணர் அமுதவாக்குக் 'கண்ணப்ப நிற்க' (பெ. பு. 183)-மூன்றுமுறை கூறக்காரணம் என்ன?

நாக. மாதவி எம். ஏ.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துன்மதி ஸ்ரீ மார்கழி மீ (1981 டிசம்பர்—82 ஜனவரி)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலவ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (16—12—81) | புதன் | சஷ்டி 23-08 | மகம் 23-35 |
| 2 | (17—12—81) | வியாழன் | சப்தமி 23-02 | பூரம் 24-06 |
| 3 | (18—12—81) | வெள்ளி | அஷ்டமி 23-43 | உத்திரம் 25-21 |
| 4 | (19—12—81) | சனி | நவமி 25-05 | அஸ்தம் 27-16 |
| 5 | (20—12—81) | ஞாயிறு | தசமி 27-00 | சித்திரை 29-41 |
| 6 | (21—12—81) | திங்கள் | ஏகாதசி 29-19 | சுவாதிநாள்முழுவதும் |
| 7 | (22—12—81) | செவ்வாய் | துவாதசிநாள்முழுவதும் | சுவாதி 8-28 |
| 8 | (23—12—81) | புதன் | ,, 7-53 | விசாகம் 11-28 |
| 9 | (24—12—81) | வியாழன் | திரயோதசி 10-32 | அனுஷம் 14-32 |
| 10 | (25-12—81) | வெள்ளி | சதுர்த்தசி 13-10 | கேட்டை 17-34 கிருஸ்மஸ் |
| 11 | (26—12—81) | சனி | ●அமாவாசை 15-40 | மூலம் 20-27 |
| 12 | (27—12—81) | ஞாயிறு | பிரதமை 17-57 | பூராடம் 23-07 |
| 13 | (28—12—81) | திங்கள் | துவிதியை 19-55 | உத்திராடம் 25-29 |
| 14 | (29-12-81) | செவ்வாய் | திருதியை 21-32 | திருஓணம் 27-28 |
| 15 | (30-12-81) | புதன் | சதுர்த்தி 22-41 | அவிட்டம் 29-01 |
| 16 | (31-12-81) | வியாழன் | பஞ்சமி 23-18 | சதயம் 30-03 |
| 17 | ( 1-1-82 ) | வெள்ளி | சஷ்டி 23-21 | பூரட்டாதி 30-31 |
| 18 | ( 2-1-82 ) | சனி | சப்தமி 22-17 | உத்திரட்டாதி 30-21 |
| 19 | ( 3-1-82 ) | ஞாயிறு | அஷ்டமி 21-35 | ரேவதி 29-36 |
| 20 | ( 4-1-82 ) | திங்கள் | நவமி 19-46 | அசுவனி 28-15 |
| 21 | (5—1—82) | செவ்வாய் | தசமி 17-25 | பரணி 26-24 |
| 22 | (6—1—82) | புதன் | ஏகாதசி 14-36 | ※கிருத்திகை 24-09 வைகுண்டஏகாதசி |
| 23 | (7—1—82) | வியாழன் | துவாதசி 11-27 | ரோகணி 21-37 |
| 24 | (8—1—82) | வெள்ளி | திரயோதசி 8-05<br>சதுர்த்தசி 28-41 | மிருகசீரிஷம் 18-57 |
| 25 | (9—1—82) | சனி | ○பௌர்ணமி 25-23 | திருஆதிரை 16-18 தரிசனம் |
| 26 | ( 10-1-82 ) | ஞாயிறு | பிரதமை 22-20 | புனர்பூசம் 13-51 |
| 27 | ( 11-1-82) | திங்கள் | துவிதியை 19-41 | பூசம் 11-45 |
| 28 | ( 12-1-82) | செவ்வாய் | திருதியை 17-37 | ஆயில்யம் 10-09 |
| 29 | ( 13-1-82) | புதன் | சதுர்த்தி 16-13 | மகம் 9-11 போகி |

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் நிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம் அதிபர்
**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி**
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

மனம் சொன்னதைக் கேட்பதில்லை. யார் சொன்னதையும் கேட்பதில்லை.பல நேரங்களில் நாம் சொன்னதையே கேட்பதில்லை. இங்கே நாம் என்பது ஆன்மா. ஆன்மாவை எஜமானன் அல்லது இயமானன் என்பார்கள். எஜமானன் என்றால் உத்தரவிட உரியவன். அவ்வளவு சர்வ உரிமை பெற்ற எஜமானனின் வார்த்தையையே இந்த மனம் புறக்கணிக்கிறது.

மனத்தின் கெட்ட குணம் இன்னொன்றையும் கவனியுங்கள்.

மனம் நினைக்கும்;
புத்தி நிச்சயிக்கும்;

அந்தப் புத்தியை இது எங்கே நிச்சயிக்க விடுகிறது. புத்தியையும் தன்பக்கம் திருப்பிக் கொள்கிறது. புத்தியை மட்டுமா? எல்லாக் கரணங்களையும் எஜமானனையும் இது இழுத்து இதன் இஷ்டத்திற்கே இட்டுச் செல்லும்.

தன்னை உடையவனைத் தன் போகிற்க்கு இட்டுச் செல்வதினுல் இன்னலுக்கு ஆளாக்குகிறோமே என்று இது நினைப்பதே இல்லை.

அப்படியென்ருல் மனத்தை இரும்பு என்று சொல் வதுதான் பொருத்தம். இது இன்னமும் போன போக்கி லேயே போனுல் பழுக்கக் காய்ச்சிச் செம்மட்டியால் அடித்துத்தான் வளைக்க வேண்டும்.

'என்வசமாக நில்லாத நெஞ்சாம் இரும்பு'

சந்தனத்தைக் குழைப்பது உண்டு. மஞ்சள் தூளைக் குழைப்பது உண்டு. திருநீற்றைக் குழைப்பது உண்டு. பொடி யாக உள்ளவற்ருேடு நீர் கலந்து ஒன்ருக்குதலைக் 'குழைத் தல்' என்பார்கள்.

இரும்பை இவ்வாறு குழைக்க முடியாது. உருக்கத் தான் முடியும்.

சிஷ்யனின் வசப்படாத மனமாகிய இரும்பைக் குரு நாதராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் நெருப்பால் உருக்க வில்லை. நீரால் குழைக்கிருர்.

நெருப்பால் உருக்குதல் மறக்கருணை. அப்பர் சுவாமி கட்குச் சிவபெருமான் சூலைநோய் கொடுத்து ஆட் கொண்டது போல.

நீரால் குழைப்பது அறக்கருணை. ஞானசம்பந்தருக்குச் சிவபெருமான் அம்பிகையை ஞானப்பால் கொடுக்கச் செய்து ஆட்கொண்டதுபோல.

இரும்பை நீரால் குழைக்க முடியுமா? இறைவனின் வேறற்றவனுகிய ஞானசிரியன் அல்லவா இதைச் செய் கிருன்; அவனுல் ஆகாததும் ஒன்று இருக்க முடியுமா?

சிஷ்யனின் வசப்படாத நெஞ்சாகிய இரும்பை அன்பு நீரால் குழைத்தவர் அதனைப் புறம்போகாது தன் வசம் ஆகுமாறு ஈர்த்துக் கொண்டார்.

‘என்வச மாக, நில்லாத நெஞ்சாம்

இரும்பைக் குழைத்துத்

தன்வசமாக் கொண்டு இழுக்கின்றது’

இரும்பை இழுக்கின்றது என்ருல் நிச்சயமாக அது காந்த மாகத்தான் இருக்க வேண்டும். காந்தம் இரும்பை இழுக்கும்; இரும்பை மட்டும்தான் இழுக்கும். வேறெந்த உலோகத்தையும் அது இழுக்காது.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகரைக் காந்தம் என்று சொன்ஞல் ஸ்ரீ மாசிலாமணி தேசிகரால் ஈர்க்கப் பெற்ற அடியார்கள் அனைவரின் மனமும் இரும்பு மனம் என்றல்லவா பொருளாகும்?

அதுமட்டுமன்று, மனத்தின் இரும்புத் தன்மை மாறித் தங்கமாகிவிட்டால் குருதேவரிடத்தில் உள்ள பிடிப்பு விட்டுப் போகுமோ?

கட்டியான இரும்பை இரும்புத் தூளாக்கிக் குழைத்த குருதேவர் மேற்கொண்டு அந்த மனத்தின் தரத்தை உயர்த்தவே இல்லையோ?

இந்த ஐயங்களுக்கெல்லாம் ஒரு சிறு தொடரில் விடைசொல்கிருர் நம் சுவாமிகள்.

மாசிலாமணி

பொன்வச மாகச்செய் காந்தம்

ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை இரும்பை இழுக்கும் காந்தம் என்று மட்டும் நினைத்து விடாதீர்கள்.பொன்னையும் இழுக்கும் காந்தம்.அப்படிஒருகாந்தம்உலகத்தில் உண்டா?இல்லை. இது இல் பொருள்தான். ஆனலும் மாசிலாமணி தேசிகரால் ஈர்க்கப்படும் அடியார்கள் அனைவரும் இரும்பு மனத்தவர் மட்டுமல்லரே. பொன்மனத்தவர்களும் உண்டே!

இப்படித் தன் குருநாதருக்குப் புகழ்சேர்த்த சுவாமிகள் தம் குருநாதரை இப்படி அறிமுகம் செய்கிறார்:

1. தொண்டர் தம்மை அருள்மன்
2. வசமாகச்செய்யும் மாசிலாமணி
3. மாமணி

இன்னொரு விதமாகக் கூட்டிப் பார்க்கும் பொழுது– 'மன்வசமாகச் செய்யும் மாசிலாமணி' எனக் கூட்டும் பொழுது - அரசர்களையும் வசமாகக் செய்யும் என்பது பொருளாகிறது.

இனிப் ப்ாடலின் முழு வடிவையும் காணுங்கள்;-

என்வசம்ஆக நில்லாத நெஞ்சாம்
இரும்பைக் குழைத்துத்
தன்வசமாக் கொண்டு இழுக்கின்றதால்
தொண்டர் தம்மைஅருள்
மன்; வசமாகச் செயும் மாசிலாமணி
மாமணிக்குப்
பொன்வசமாகச் செய்காந்தம்
என்றே சொல்லப் போந்ததுவே.

[மாசிலாமணி என்பதனோடு காந்தம் என்றும், மாமணிக்கு என்பதற்கு நெஞ்சம் என்ற சொல்லும் வருவித்துப் போந்ததுவே என்பதனோடு கூட்டுக. காந்தம் என்றதன் பின் இழுக்கின்றதால் என வைத்து வினைமுடிவு செய்க]

'ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே' என்னும் சிவபுராணத் தொடருக்குத் தனியொரு பாடல் வடிவம் என்று இத் திருப்பாடலைச் சொல்லலாம்.

— சிவ சிவ

# ஸ்ரீ நடராஜமூர்த்தி

தா. ம. வெள்ளைவாரணம்

சைவர்களால் கோயில் என்று சிறப்பாகக் குறிக்கப் பெறுவது சிதம்பரம். இங்கே பொன்மன்றில் ஆடும் பெருமானே ஸ்ரீ நடராஜ மூர்த்தி. இப்பெருமான் எஞ்ஞான்றும் ஆடிக்கொண்டே இருப்பதால் தான் உலகில் உள்ள அனைத்து அணுக்களும் ஆடி அசைந்து இயங்கு கின்றன. அதனால் இப் பெருமானைச் சோழர்காலக் கல்வெட்டுகள் **ஆடல் வல்லான்** என்று குறிக்கின்றன.

நடராஜ மூர்த்தியின் செப்புத் திருமேனிகளைப் பல்லவர்களும் சோழர்களும் பின் வந்தோர்களும் திருக்கோயில்களில் எழுந்தருளுவித் திருக்கிறார்கள். செப்புத் திருமேனிகள் மட்டுமன்றிக் கற்சிலையாலும் சுதையாலும் மரகதம் முதலிய கற்களாலும் ஆகிய திருமேனிகளும் திருக்கோயில்களில் இருக்கின்றன.

ஆடல்வல்லானின் திருமேனிகள் பல்வேறு ஆடற் கோலங்களில் அமைந்துள்ளன. வலக்காலை முயலகன்மேல் ஊன்றியும், இடக் காலை வலப்பக்கமாக நீட்டித் தொங்கவிட்டும், மேல் வலக்கையில் உடுக்கையை ஏந்தியும், மேல்இடக்கையில் நெருப்பை ஏந்தியும், கீழ் வலக்கையால் அபயமுத்திரை காட்டியும், கீழ்இடக்கையை வலப்பக்கமாக நீட்டித் தூக்கிய திருவடியைச் சுட்டிக் காட்டியும் ஆடும் கோலம் **ஆனந்த தாண்டவம்** எனப்படும். இக் கோலத்தைப் பெரும்பாலான கோயில்களில் காணலாம். இடக்காலை ஊன்றி வலக் காலைத் தலைக்குமேல் உயரத் தூக்கி ஆடும் கோலம் **ஊர்த்துவ தாண்டவம்** என்பபடும். இதனைத் திருவாலங்காடு முதலிய சில கோயில்களில் மட்டுமே காணமுடியும். வலக்காலை ஊன்றி இடக் காலைச் சற்றே தூக்கி இருகால்களுக்கும் இடையே சதுரவடிவம் தோன்றுமாறு ஆடும் கோலம் **சதுர தாண்டவம்** எனப்படும். இதனை நல்லூர் முதலிய சில கோயில்களில் மட்டுமே காணமுடியும். இடக் காலை ஊன்றி வலக்காலை வலப்பக்கமாக நீட்டித் தொங்கவிட்டு

ஆடும் கோலம் கால் மாறியாடு தாண்டவம் எனப்படும். இதனைப் பாண்டி நாட்டுக் கோயில்களில் பெரும்பாலும் காணலாம். இவை போல மற்றும் பல்வேறு தாண்டவங்கள் உள்ளன.

நடராஜமூர்த்தி தாண்டவம் புரியும் இடம் மன்றம், அரங்கம் அல்லது சபை எனப்படும். இவற்றுள் ஐந்து சபைகள் சிறப்பு வாய்ந்தவை. (1) வடதிருவாலங்காட்டில் உள்ள சபை இரத்தினசபை (மணியம்பலம்). (2) சிதம்பரத்தில் உள்ள சபை கனகசபை (பொன்னம் பலம்) (3) மதுரையில் உள்ள சபை இரசித சபை (வெள்ளியம் பலம்) (4) திருநெல்வேலியில் உள்ள சபை தாமிர சபை (செம்பம் பலம்) (5) திருக்குற்றாலத்தில் உள்ள சபை சித்திர சபை (மரத்தம் பலம்).

பல்லவர் கால நடராஜர் திருமேனி ஒன்று திருவாலங்காட்டில் கிடைத்துத் தற்போது சென்னைப் பொருட் காட்சியகத்தில் இருக்கிறது. இது பேரழகு வாய்ந்தது. இதனை மேனாட்டு சிற்பக்கலைஞர்கள் பெரிதும் பாராட்டியுள்ளனர். சோழர் காலநடராசர் ஒன்று கோனேரி ராசபுரத்தில் உள்ளது. இது சுமார் 10 அடி உயரமுள்ளது. இதை விட உயரமானது இல்லை என்கிறார்கள். திருவுத்தரகோசமங்கையில் மரகதக் கல்லால்ஆன நடராசர் திருமேனி ஒன்று உள்ளது. இது சுமார் 2 அடி உயரமுள்ளது. சிதம்பரத்தில் உள்ள இரத்தின சபாபதி கோமேதகக்கல்லால் ஆனது. இது 8 அங்குலம் உயரமுள்ளது. கங்கை கொண்ட சோழபுரத்தில் கருவறையின் தேவகோட்டத்தில் உள்ள நடராஜர் திருமேனி வெண்மை நிறக்கல்லால் ஆனது. இத் திருமேனியில் குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிழ் சிரிப்பும், தூக்கிய திருவடியின் கீழே காரைக்காலம்மையார் பேய் வடிவில் கையில் தாளம் ஏந்திப் பாடும் காட்சியும் காணத்தக்கன வாகும். மதுரை வெள்ளி மன்றில் மாறியாடும் நடராசர் திருமேனி சுதையால் ஆனது. குற்றாலத்தில் சித்திர சபையில் நடராஜர் வடிவம் ஓவியமாக வரையப்பட்டிருக்கிறது.

நடராசப் பெருமானின் ஆடல், பலதத்துவம் பொருந்தியது. அவரது வலக்கையில் உள்ள உடுக்கை படைத்தலையும் மற்றொரு வலக்கை அபயம் கொடுத்துக் காத்தலையும் இடக்கையில் உள்ள நெருப்பு அழித்தலையும் ஊன்றிய கால் மறைத்தலையும் தூக்கிய திருவடி (குஞ்சிதபாதம்) அருளலையும் செய்கின்றதாகச் சாத்திர நூல்கள் கூறுகின்றன. மற்றும ஊன்றிய காலின் கீழே கிடக்கும் முயலகன் ஆணவ மலத்தையும் திருவாசி ஓங்காரத்தையும் உணர்த்துவதாகக் கூறப்படுகிறது.

நடராஜமூர்த்தியின் பெருமை சொல்லில் அடங்காது. அதனால் தான் "மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே" என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ரத்னச் சுருக்கமாகக் கூறினர்.

# 50. உயிரைப் பேணல்

தமிழாக்கம் - கோ. வன்மீகநாதன்

வாழ்விலிருந்து சாவு புகுகின்றது
வாழ்வின் தோழ உறுப்புக்கள் பதின்மூன்று[1]
சாவின் தோழ உறுப்புக்களும் பதின்மூன்று
இல்வாழ்வில் மனிதனைச் சாகடிப்பதும் (இதே) பதின்மூன்றே.
இதெப்படி?
பெருகிக் கொண்டே வரும் உயிர்களின் செறிந்த
இயக்கத்தால்
தன் உயிரை நன்கு பாதுகாக்கிறவன் என்று சொல்லப்
படுகிறவன்
தரையில் புலிகளையோ காட்டெருமைகளையோ
எதிர்ப்படுவதில்லை,
போர்க்களத்தில் ஆயுதங்களால் காயப்படுவதற்கு
ஆளாவதில்லை
என்று சொல்லப் பட்டிருக்கிறது.
காட்டெருமையின் கொம்புகள் அவனிடம் தம் ஆற்றலை
இழக்கின்றன;
புலியின் பாதங்கள் அவனுக்கு எதிரே பயனற்றனவாயிருக்
கின்றன.
இதெப்படி?
அவன் சாவுக்கு அப்பாலனுதலால்[2]

---

1. இவை கை கால் என்ற நான்கு அவயவங்களும் நவத் துவாரங்களுமாகும்.

2, சொல்லுக்குச் சொல் பொருள் கொண்டால், "சாவில்லாதவன்' என்பது பொருள்;

# 51. தெய்விக ரகசியமான பண்பு

டௌ அவற்றைப் பிரசவிக்கின்றுன்,
டே (குணப்பண்பு) அவற்றைப் பேணி வளர்க்கின்றன
ஸ்தூல உலகம் அவற்றிற்கு உரு அளிக்கின்றது
அந்தந்த க்ஷணத்து சூழ்நிலை அவற்றை முழுமையாக்குகின்றன.
ஆகையால் உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும்

டௌவைப் பூஜிக்கின்றன, டேயை உயர்த்துகின்றன
யாருடைய கட்டளையுமின்றித் தன்னியல்பாக
டௌ பூஜிக்கப் படுகின்றது, டே உயர்த்தப் படுகின்றது.

ஆகையால் டௌ அவற்றைப் பிரசவிக்கின்றன,
டே அவற்றைப் பேணி வளர்க்கின்றன.
அவற்றை வளரச் செய்கிறது, அவற்றை விருத்தி செய்கின்றது.
அவற்றிற்கு ஒரு புகலிடமளிக்கிறது, அமைதியுடன் வாழ
ஓரிடமளிக்கிறது;

உணவளிக்கிறது, உறைவிடமளிக்கிறது

அவற்றை அது பிரசவிக்கிறது, ஆனுல் அவற்றைத் தன்
உடைமையாக ஆக்கிக் கொள்வதில்லை,

உதவிபுரியும் வகையில் செயற்படுகின்றது, ஆனுல்
அவற்றை அபகரிப்பதில்லை,

அவற்றிற்குச் சிறந்ததாக (மேலாக) இருக்கிறது,
ஆனுல் அவற்றைத்தன் கட்டுக்கு
உட்படுத்துவதில்லை.

— இதுதான் தெய்விக ரகசியமான பண்பு.

# நூல் நிறை

## சிவஞான பூஜாமலர்

[பதிப்பாசிரியர்—ஆங்கிரஸ வெங்கடேச சர்மா; வெளியீடும் கிடைக்குமிடமும்: ஆங்கிரஸ S. வெங்கடேச சர்மா, 5-டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு, மேல மாம்பலம், சென்னை-600033; விலை ரூ 5—00; அஞ்சல்வழி + 5—50; பக்கம்-10+264]

'மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் செய்த தேவாரத் திருப் பாடல்' களுக்கு உரையுடன் கூடிய நூற்றொகுதிகளை வெளியிட வேண்டும்' எனும் புனிதப் பணியை முன்னிறுத்தி அதன் நிதியுத விக்காக வெளியிடப் பெற்றுள்ளது இந்நூல் என எண்ணுகையில் அதன் மேன்மை தெள்ளிதின் அறியக்கிடக்கின்றது.

தமிழறிஞர்கள் பலரின் எண்ணத்தில் உதித்த சிறந்த கருத்துக் கருவூலங்களைத் தாங்கி இந்நூல் மிளிர்கிறது.

சிவபக்தி, சிவனருள், சிவநடனம், சிவதோத்திரம், சிவாஷ்டகம், சிவபரத்துவம் ஆகிய நிலைகளில் புலவர்கள் பலர் நின்று ஆய்ந்து அரிய படைப்புகளை அளித்துள்ளனர்.

தருமையாதீனம் ஸ்ரீ லஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வானொலிவழி அருளிச்செய்த திருக்குறள் விளக்கப் பேருரைகளை முன் கேட்காதவரும் அறிந்து பயன்பெறும் வகையில் வெளியிட்டுள் ளமை நல்லதொரு செயலாகும்.

பதினெண் புராணங்களும், அவற்றுள் ஒன்றாகிய கூர்ம புரா ணத்தின் கதைகளும் அழகுற விளக்கப் பெற்றுள்ளன.

சித்தாந்த சைவம் தெளிவுறுத்தப் பெற்றுள்ளது; திருக்குறளில் சைவ சித்தாந்தக் கூறுகள் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன.

'தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயாவினால்'– மணநிச்சயம் செய்த மாவீரர் மறைந்த பின்னும் வாழ்வு நடத்திய திலகவதியாரின் தொண்டு நலமும், கவிராஜ காளமேகத்தின் சிவ பக்தியும், கம்பன் கண்ட கண்ணுதற் கடவுளும் இந்நூலில் ஏற்ற தொரு பெற்றியில் இயம்பப் பெற்றுள்ளன.

பத்துப்பாட்டுள் ஒன்ருகிய 'மதுரைக் காஞ்சி' காட்டும் சமயச் செய்திகளை எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

திருப்பனந்தாள், ஸ்ரீ பெரும்புதூர் முதலான திருத்தலங்களின் மகிமைகள் சிந்திக்கப்பெற்றுள்ளன.

இந்நூலின் முற்பகுதியில் இடம்பெறுகின்ற சமயத்தலைவர்க ளின் வாழ்த்துரைகள் சிறப்பானவையாகும்.

அரிய படைப்புக்களை நல்கிய அறிஞர்களை அறிமுகப்படுத்தும் திறம் புதுமையானது; போற்றத்தக்கது

தமிழ்நூல் பயில்வும், திருமுறைத் தோய்வும், கேட்டாரைப் பிணித்துக் கேளாரும் வேட்பமொழியும் சொல்வன்மையும், அரிய நற்பண்புகளும் வாய்ந்த திரு. சர்மா அவர்களின் புனிதப் பணியை இந்நூலினை வாங்குவதன் வழியாக ஆதரிக்க வேண்டியது ஆத்திக அன்பர்தம் கடமை.

## திருத்தொண்டர் சதகம் முதலியன

*[பதிப்பாசிரியர்: திரு. கா. ம. கண்ணப்பன் பி. லிட்., வெளி யீடு: அன்னபூர்ணு பதிப்பகம், 7-சன்னதித் தெரு, திருப்பனந்தாள் 612 504; கிடைக்குமிடம் அன்னபூர்ணு பதிப்பகம், 103-வடக்குவீதி, சிதம்பரம் – 608 001; விலை:–ரூ. 6/; பக்கம் – 124+14-138]*

திருத்தொண்டர் சதகம், பெரியபுராண சாரவெண்பா, சுந்தரப் பெருமாணுயனுர் புராணம் எனும் மூன்று நூல்களின் தொகுப்பாக அமைந்துள்ளது இந்நூல்.

திருவாட்போக்கி எனும் திருத்தலத்துப் பெருமாணும் மாணிக்க மலை நாதரின் பொருள்சேர்புகழை அறுபான் மும்மை நாயன்மார் களின் அருட்பெரும் வரலாற்ருேடு இயைத்துப் போற்றும் வகை யால் கச்சிமலைக் கொழுந்து நாவலரால் இயற்றப் பெற்றது திருத் தொண்டர் சதகமாகும். அளவிலாத பெருமையராகிய அடியார் பெருமையைப் புகல்வதாக அமைந்துள்ளது; மன்றுளார் அடியாரின் மரபு, அவர்கள் முத்திபெற்ற முறைமை, முத்தமிழ்ப் பயிற்சி, அவர் களின் ஆச்சிரமம் ஆகியவை அழகுற விளக்கப் பெற்றுள்ளன.

இனிய எளிய செய்யுள் வடிவில் அமைந்துள்ள இந்நூல் அறுபத்து மூவரின் திருநட்சத்திரங்களை முறையாக மொழிகின்றது; மாணிக்க

மலைச் சிறப்பை, அங்கு பூசனை செய்து பேறெய்திய ஆரிய மன்னன், ஆதிசேடன், தேவேந்திரன், அகத்தியர் ஆகியோரின் வழி புலப் படுத்துகின்றது.

வெண்பா யாப்பில் சீரார் அறுபத்து மூவர் திருத்தொண்டைச் செப்புகின்ற பெரியபுராண சாரவெண்பா சுருங்கிய அடியில் விரிந்த புகழினை விளம்புவது; இதனை இயற்றியவர் தெய்வநாயக முதலியார் அவர்கள்.

ஈற்றிலே அமைந்துள்ள சுந்தரப் பெருமாணுயனுர் புராணமும் திருத்தொண்டர் அறுபத்து மூவரின் மகிமையை விளக்குவதாகவே திகழ்கின்றது.

ஒப்புடை மூன்று நூல்களை ஒருங்கே தொகுத்து, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்ற கதைக்குறிப்புடன் திருத்தமான பதிப் பாக அளித்திருக்கும் திரு. கா. ம. கண்ணப்பன் சிறந்த தமிழ்ப் புலமை செறிந்த குடித்தோன்றல்; சிந்தனைச் செல்வமும், சொல்லுதல் வல்லமையும், செயலாற்றல் திறனும், எழுத்து வன்மையும் மிக்கவர்.

தொண்டர் வரலாற்றுத் தொடராகிய இந்நூல் அனைவரிடத் தும் இருக்க வேண்டிய அரியதொரு நூலாகும்.

புலவர். முருகு. சுவாமிநாதன் பி. லிட்.,
(எம்.ஏ)

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

# செவ்வழி

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

திருமுறைக் கலாநிதி, இசைநம்பி
திரு. S கல்யாணசுந்தர தேசிகர்
ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, கும்பகோணம்.

மலைச்சாரலின் அடிவாரம். பல நீரோடைகள் ஓடி வந்து ஒரு பொய்கையிலே விழ்கின்றன. பொய்கையைச் சுற்றி மா பலா பாதிரி முதலிய மரங்களும் மல்லிகை முல்லை முதலிய கொடிகளும் அடர்ந்து அழகு செய்கின்றன. கண்ணுக்கினிய அழகும் கருத்துகந்த மணமும் கலந்து மிக ரம்யமாக இருக்கிறது. வண்டுகள் முல்லை அரும்புகளின் மேல் உட்காருவதும் எழுவதுமாக மெல்ல மெல்லப் பறக்கின்றன. மாலை நேரம் பொருந்தியதும் முல்லையரும்புகளின் இதழ்கள் மெல்ல நெகிழ்கின்றன. வண்டுகள் மலரினுள்ளே புகுந்து தேனுகிய மதுவை உண்டு மகரந்தத் தூளை அளைந்து சிவந்த நிறமடைந்து மதுவின் போதையில் முல்லைப்பண்ணை இசைக்கின்றன. ஆம் முல்லைப்பண்ணைத் துத்தம என்ற சுருதியைக் கொண்டு செவ்வழி என்ற இசையை வெகு இனிமையுடன் ரீங்காரம் செய்கின்றன. (துத்தம் என்பது ரீ என்ற சுரம்)

வண்டுகள் பாடும் முல்லைத் தீம்பாலில் இயைந்த சுரங்களில் மோகமுற்று மயில்கள் தோகையை விரித்து அழகாக ஆடத் தொடங்குகின்றன. இளைய மான் கன்றுகள் துள்ளித்துள்ளி நடைபோடுகின்றன. பொய்கையில் உள்ள கெண்டை மீன்கள் நீருக்கு மேலெழுந்து பாய்கின்றன. கெண்டை மீன்கள் தம் மேல் விழுவதால் சுனையின் நீல மலர்கள் மொட்டவிழ்கின்றன.

இந்தச் செவ்வழிப்பண்ணை, ஞான அமுதமுண்டு கான அமுதத்தைத் தேனுகப் பொழிந்த ஞானசம்பந்தர் பாடிய தேவாரத்தில் மட்டுமே காணலாம். சிறைவண்டுகள் குருந்தமேறிச் செவ்வழிப்பண்ணை இனிமையாக ரீங்காரம் செய்தன என்றும் மது உண்டு சிவந்த நிறமாகிச் செவ்வழிப் ப்ண்ணைப்பாடின என்றும் சம்பந்தர் தமது தேவாரத்தில் குறித்துள்ளார்.

இந்தச் செவ்வழிப்பண் 28-வது மேளம் ஹரிகாம்போதியின் ஜன்யமாக அமைந்திருக்கிறது. இதன் ஆரோகணம்:- சரி மா. பாதஸ்ா - அவரோகணம்:- சாநி தப மகரிகஹ. ஆரோகணத்தில் காந்தாரமும் நிஷாதகமும் விலக்கப்பட்டுள்ளன.

ஆரோகணத்தில் பாதஸ்ா என்ற கார்வை அமைதியாக ஆரம்பித்துக் கம்பீரமாக அதிலேயே கார்வையுடன் அடங்கி ஒலிக்கும்.இப்பண்ணின் சஞ்சாரம் 2 அல்லது 3, 4 சுரங்கள் சேர்ந்து அலங்கார வளேவுகளாக ஒலிக்கிறது. சாரிமா-காமபா-மாபதா -பாதஸ்ா - பாதநீத பாதநீத பாபம காமப காரி காமகரீகஸா என்று இப்பண்ணின் முக்கிய சஞ்சாரம் அமைந்திருக்கிறது. தைவதமும் நிஷாதகமும் இராக சாயைக்கு முக்கியமாக அமைந்துள்ளன. இவற்றுக்கு சம்வாதியான காந்தாரமும் ரிஷபமும் அதேவிதமாகப் பிரஸ்தாரம் அமைந்திருப்பது கவனிக்கத் தக்கதுஇப்பண்ணின் ஆலாபனேச் சஞ்சாரம் மிகப்பிரசித்தமானது. தொண்டரஞ்சு என்ற பாடலின் ஆரம்பம் ரீகஸா என்றும், கெண்டை பாயச்சுனே நீல மொட்டலரும் கேதாரமே என்பது பாதஸ்ாஸ பாதஸ்ா நீதபா, தப பாமா பாதநீதாபம கமப காரி காமகரீகஸ என்றும் வருகின்றன. இதனேக்கவனிக்கும் போது ஒவ்வொரு இசையும் நாலேந்து சுரங்களோடு துண்டு துண்டாகக் கத்தரித்துப் போகின்றன என்பது தெரிய வருகிறது. இவ்விதம் நான் கைந்து பிடிகள் கத்தரித்துப் போவதனுலும் சஞ்சாரம் நேர் வழியாக இல்லாதிருப்பதாலும் இதன் மூர்ச்சனேயைக் கண்டு பிடிப்பது எளிதாக இல்லே. பஞ்சமத்தில் தொடங்கி மேல்சட்சமத்திற்குப் போய்ப் பின் அவரோகணமாக மத்திம சட்சமத்துக்கு வருவதே இதன் முக்கிய மூர்ச்சனேயாகிறது. ஆகவே இப்பண்ணுக்கு மேல்சட்சமத்துக்கு மேலேயும், மத்திய சட்சமத்துக்குக் கீழேயும் அதிக சஞ்சாரமில்லே. கீழே சஞ்சாரம் செய்தாலும் செய்யலாம். மேல் சட்சமத்துக்குமேல் சஞ்சாரம் செய்வது எளிதல்ல. ஆகையால் மேல் சட்சமத்தோடு சஞ்சாரத்தை நிறுத்திக் கொள்வதே மேலானது. இத்தனேச் சிறப்புள்ள இப்பண்ணின் பழைய தமிழ் இசைப் பெயரான செவ்வழி என்பது மறைந்து தற்காலம் எதுகுல காம்போதி என்ற பெயரே வழங்கி வருகிறது.



உ

சிவ சிவ

## சிதம்பரத்தில்

# தேர்த் திருவிழா திருப்பல்லாண்டு ஓதுதல்

8—1—82 மார்கழி மாதம் 24-ஆம் தேதி வெள்ளிக்கிழமை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

அருளாணையின்வண்ணம் சிதம்பரத்தில் தேர்த்திருவிழாவில் சேந்தனுர் அருளிய திருப்பல்லாண்டு ஓதப்பெறும்.

1. திரு M. கனகசபைப் பிள்ளை—சிதம்பரம்
2. திரு M. ரெத்தினம் பிள்ளை—சிதம்பரம்
3. திரு C. S. குமாரசுவாமி ஓதுவார்—கொள்ளிடம்
4. தேவாரமணி
   திரு. ஆ. சட்டையப்பன்—சிதம்பரம்

வையத்து வாழ்வீர்காள் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுவீராக.

அருளாணையின் வண்ணம்
R. சுப்பிரமணிய பிள்ளை
ஏஜண்டு, ஸ்ரீ காசிமடம், சிதம்பரம்.

திருப்பனந்தாள்
1—12—81

# வேண்டாமை வேண்டும்

புலவர். முருகு. சுவாமிநாதன், பி. லிட்., (எம். ஏ.,)

உலகில் வாழும் மனிதர்களை இரண்டு வகைக்குள் அடக்கலாம். அவருள் ஒரு வகையினர் தங்களது அன்றாட வாழ்க்கைக்கும் மற்றும் துய்ப்புக்களுக்கும் உரிய செல்வத்தைப் பெற்று அஃதில்லாதவர்க்கு அளிக்கக் கூடிய நிலையில் உள்ளவர். மற்றொருசாரார் தம்முடைய வாழ்வுக்குத் தேவையான பொருள்களைக் கொண்டிராமல் அது உடையவரிடம் பெறக்கூடிய நிலையில் உள்ளவர்; இவர்களை,

''தானமால் களிறும்
மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக
நலம்பாடு இன்றி
நாண்துறந் தொரீஇ
இலம்பா டலைப்ப
ஏற்குநர் ஏற்க
புரவலர் புரத்தலும்
இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும்
இவ்வுல குடைத்தே''
(திரு. நான்மணி)

எனப் பகுப்பர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

இவ்வாறு கொடுக்கும், ஏற்கும் நிலையில் உள்ள அனைவருமே தம்மிடம் உள்ளதை எண்ணி உவப்படையாது இல்லதையும், எண்ணுவ தெல்லாவற்றையும் கேட்டுப்பெற ஒரே இடம்தான் உண்டு; அதுதான் இறைவனுறையும் திருக்கோயில்; திருக்கோயில் சென்று வழிபாடாற்றுவார் காதலாகிக்கசிந்து கண்ணீர் மல்கி ஓதித்தமது குறையை நிறைவிக்க வேண்டுவர்; நோய் நீக்க வேண்டுவர்; செல்வம் பெருகவேண்டுவர்; இவ்வாறெல்லாம் தங்கள் மனங்கொண்டவற்றைப் பலவகையிலும் வேண்டுவர்.

'வேண்' என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்தவையே வேட்கை, வேண்டல், வேட்டம், வேட்டை என்ற சொற்கள். 'பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளமே வேட்கை' என வரையறை செய்வர் நச்சினார்க்கினியர்.

சாதாரண மனிதர் இவ்வாறு லௌகிகத் தேவைகளைப் பெற இறைவனிடம் வேண்டுவதைக் காண்கின்றோம். ஆனால் 'வீடும் வேண்டா விறலினோடு ஓடும்

செம்பொன்னும் ஒக்கவே நோக்கிக் கந்தை மிகையாம் கருத்து'டைய அருளாளர்களின் வேண்டுதல்களும், அருங்கவிஞர் களின் வேண்டுதல்களும்எவ்வாறு அமைகின்றன என்பதைக்கண்ணு கையில் அவர்களின் சிந்தையின் உயர்வு தெள்ளிதின் புலப்படும்.

பாட்டுக்கொரு புலவன் பாரதி பராசக்தியிடம் 'எனக்குக் காணி நிலமும், அதில் மாளிகையும், தென்னைமரங்களும், பத்தினிப் பெண்ணும் அத்தோடு பாட்டா லே உலகைக் கவரும் திறமும் வேண்டும்' என்கின்றான்.

காணிநிலம் வேண்டும் பராசக்தி
............ஓர் மாளிகை
கட்டித்தர வேண்டும்
பத்துப் பன்னிரெண்டு
தென்னைமரம்
பக்கத்திலே வேணும்
பாட்டுக் கலந்திடவே
அங்கேயொரு
பத்தினிப் பெண் வேணும்
பாட்டுத் திறத்தாலே
இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்.

வாடிய பயிரைக் கண்டதும் வாடிய வள்ளலார், இறைவ னிடம் 'உயிர்களுக்கு அன்பு செய் தல், இறைவன் புகழ் மொழிதல், தப்புகள் செய்தால் பொறுத் தருளுதல்' ஆகியவற்றை வேண்டு கின்றார்.

அப்பாநான் வேண்டுதல் கேட்
டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான்
அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும்
எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை
இயம்பியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும்
நீபொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப் பிரியாத
நிலைமையும் வேண்டுவனே!

'பாரனைத்தும் பொய்யெனவே ஆரும் துறக்க வியலாத நிலையில் துறந்த பட்டினத்தடிகளும் 'பிறந்தால் என்னால் ஆற்ற முடி யாதாகையால் பிறவித்துன்பம் கடக்க வேண்டும் என நினைக்கும் நெஞ்சினையும், அதற்குரிய வழி யையும்' அருள வேண்டுகின்றார்.

யான்இனிப் பிறத்தல்ஆற்றேன்
......கற்பம்
கடத்தல்யான்பெறவும் வேண்டும்
கடத்தற்கு
நினைத்தல்யான் பெறவும்
வேண்டும் நினைத்தற்கு
நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டும்
(திரு. மும். கோ)

நாயகன் அருளால் நற்சமயங் கள் ஆனவற்றின் நல்லாறு தெரிந் துணர்ந்த ஆளுடைய அரசும் 'அற்பப் புழுவாக நான் பிறந் தாலும் உன் திருவடி மறவா திருக்க வரந்தர வேண்டும்' என மொழிவது நோக்கற்குரியது:

'புழுவாய்ப் பிறக்கினும்
புண்ணியா உன்னடி
என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்'
(திருநாவு)

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் ஆண்டவனை இறைஞ்சி வேண்டுகின்ற வேண்டல்கள் பலவிதமாக அமைந்துள்ளன; அவற்றை முறையே காண்கையில் அவரது திருவுள்ளப் பாங்கினையும், திருத்தொண்டின் உறைப்பையும், இறைவனடியன்றி வேறெதும் விழையாத சீலத்தையும் உணர முடிகின்றது.

'உன்னடியையணைந்துஏத்தேன் ஆயினும் திருத்தொண்டராயினவர்களோடு சாரப் பெற்றுள்ளேன். ஆனாலும் என்னுடைய துன்பத்தைப் போக்குகின்றாயல்லை. ஏனெனில் பிறவியெடுக்கின்ற பிற கடவுளர் போலாது நீபிறவா யாக்கைப் பெரியோன் ஆதலால் நீ அதன் கஷ்டத்தை உணரமாட்டாய்; உணர்ந்திருப்பின் அருள் செய்திருப்பாய். அதன் துன்பத்தை அறிந்து என்னைக் காத்தருள வேண்டும்' என்கின்றார்

''நின்னடித் தொழும்பின்
நிலைமையின் றேனும் நின்
தன்னடித் தொழும்பர்
சார்பு பெற் றுய்தலிற்
சிறியவென் விழுமந்
தீர்ப்பது கடனென
அறியாய் அல்லை
அறிந்துவைத் திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப் பலைப்பச்
சோரா நின்றவென்
துயரொழித் தருள்கிலை
புறக்கணித் திருந்ததை
யன்றே குறித்திடிற்
கோள்வாய் முனிவர்
சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத்
தீப்பயன் கொண்மார்
உடல்சுமந் துழலும்அக்
கடவுளர்க் கல்லதை
பிறவியின் துயர்நினைக்
கறிவரி தாகலின்
அருளா தொழிந்தனைபோலும்'
என அருளுவர்.

மேலும் அவர்பங்கயாசனத்தில் கூடும் பசும் பொற்கொடியை-கலைமகளைப்-பரவி எனக்கு இன்னின்னது அருள வேண்டும் என்கிறார்.

'நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்',
'தூக்கும் பனுவற் றுறை தோய்ந்த கல்வியுஞ் சொற்சுவை தோய் வாக்கும்',
'பண்ணும் பரதமும் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்',
'பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்',
'சொல் விற்பனமும் அவதானமுங் கவிசொல்லவல்ல, நல்வித்தையும்',
'மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென், பண்கண் டளவிற் பணிதலும்',
எனப் பல பேறுகளை விரும்பி வேண்டுகின்றார்.

(வளரும்)

# மாதொரு பாகனர்

புலவர். இராச. இராமலிங்கம் M. A.

உலகினில் மக்களிடையே தோன்றுகின்ற ஐயங்கள் பலப்பல. அவற்றில் ஒன்று இறைவன் ஒன்ரு! பலவா! என்பது. இதனை வேதங்களும், ஆகமங்களும், சாத்திரங்களும், சிந்திக்கச் சொல்லுகின்றன. பிரம சூத்திரம் பரம்பொருள் ஒன்றே என்ற அளவில் அமையாது இரண்டில்லாதது என்று ''ஏகமேவ அத்விதீயம்பிரம'' என்றது. ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க'' என்கிருர் மணிவாசகர். ''ஒன்றென்றது ஒன்றே காண்'' என்று சொல்கிறது சிவஞானபோதம். ''ஒன்றே குலமும் ஒருவனே தேவன்'' என்று தொல்லோர் மரபுவழி வழங்குகின்றது.

இங்ஙனமிருக்க நாம் வாழ்க்கைப் பயணத்தில் செல்கின்றபோது நமக்கு ஏற்படும் துன்பங்களை நீக்குதற்கு ஒருகடவுள். இளமையும் அழகும் அகலாதிருக்க ஒரு கடவுள். பணம் பட்டம் பதவிகள் பெறு தற்கு ஒருகடவுள் நோயின்றி நெடிது நாள் வாழ்வதற்கு ஒரு கடவுள் என்று பல கடவுளரைப் பெயர் இட்டுப்போற்றி வழிபடுகின்ருேம். இவ்வாறு பல கடவுளரையும் போற்றி வழிபட்டால் தான் வாழ்க்கையைச் செவ்வனே நடத்த முடியுமா! என்ற சிந்தனை எழுகின்றது. அதுசமயம் ஒரு தத்துவஞானி என் மனத்திரையினில் தோன்றிச் சிந்தனைகளுக்கு விளக்கம் தருகின்ருர்.

உலகினில் உனக்குத் தேவைகள் பல. அவைகளை நிறைவேற்றிக் கொள்ளப் பரம்பொருளை வேண்டினுய்! நீ எந்த வடிவில் வைத்துக் கும்பிட்டாலும் அப்பொருள் அந்தந்த வடிவினிடமாக விளங்கி உனக்கு நன்மையைச் செய்தது. அதனுலே நீ கடவுளர் பலர் என்று எண்ணி விட்டாய். நீ மட்டும் அல்ல பலரும் அப்படித்தான் எண்ணுகின்ருர்கள் என்ருர். உதாரணம் ஒன்று சொல்கிறேன் கேட்பாயாக. ஒரு குடும்பத்தில் தலைவன் இருக்கின்ருன். அவனை அத்தான் என்றும், அண்ணன் என்றும், தம்பி என்றும், பிள்ளை என்றும், மாமா என்றும், சித்தப்பா என்றும் பலபேர் அழைத்துப் பயன் பெறுகின்ருர்கள் அதனுல். அவன் பல பேராகி விட்டானு! இல்லையே! அதுபோலப் பரம்பொருள் ஒன்றே

பலவகைப் பயன்களை விரும்புகின்ற நமக்குப் பல பெயர்களைத் தாங்கி வந்து அருள்செய்கிறது. அதனால் பல கடவுள் என்று எண்ணி விடாதே

''யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி—ஆங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்''

என்றும் கூறுகின்றார் அருணந்திசிவம்.

மனத்தினில் மீண்டும் ஒரு சிந்தனை எழும்புகிறது. மாதொரு பாகனார்தாம் முழுமுதற் கடவுளா! அவர்தாம் எப்பொழுதும் வர வேண்டுமா என்பது. அதற்கு எல்லாம்அழியுங்காலமாகிய சர்வசங்கார காலத்திலே எல்லாப் பொருள்களும் அதனதன் காரணத்தில் ஒடுங்கக் காரணமும் பரம் பொருளிடம் ஒடுங்கிய போது எந்தப் பொருள் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கித் தான் ஒன்றிலும் அடங்காத தாக இருக்கின்றதோ அதுதான் மீண்டும் உலகத்தைப் படைக்கவும் காக்கவும் செய்யும். இதனை ''அந்தம் ஆதி'' என்றும் ''சங்கார கார ணனையே முதலாகவுடைத்து இவ்வுலகம்'' என்றும் கூறுவர். இறைவன் ஒடுங்கிய உலகத்தை ஒடுக்கிய படியே வைத்திருக்க மாட்டான், உயிர் களின் அழுக்கினைப் போக்கவும், வினைகளை ஒழிக்கவும் மீளவும் படைப் பான். அப்பொழுது தன் ஆற்றலாகிய சத்தியைத் தன் ஒரு பாதியாகக் கொள்வான் அதனாலேயே மாதொருபாகன் என்ற சொல்லால் அப் பரம்பொருளைக் குறித்தோம் என்கிறார் அருணந்தி சிவம்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### உடல் பருமனைக் குறைக்க

அ) சாப்பிடும் போது முற்றின பப்பாளியைச் சிறு துண்டுகளாக்கி உணவில் சேர்த்துச் சாப்பிட்டுவர உடல் பருமன் குறையும்.

### இருதயம் பலம் பெற

ஆ) வெங்காயச் சாறுடன் சிறிது சர்க்கரை சேர்த்துச் சாப்பிட இருதயம் பலம் பெறும்.

### மலச் சிக்கலுக்கு

இ) வாழைப் பழத்துடன் கனிந்த கொய்யாப் பழத்தையும் சேர்த்துச் சாப்பிட மலச்சிக்கல் நீங்கும்.

Dr. N. சடையப்பன் S. M. P.

# சிவ பாதாதி கேசம்

**'சிவபாதசேகரன்'**

[செயலாளர், திருவாதிரையான் திருவருட்சபை, சென்னை]

மூவுலகும் அளந்த திருமாலும், மாமலரோனும் முறையே ஏனமாக வும், அன்னமாகவும் பறந்துங்காணு அடிமுடிகள், ''சீலத்தராகித் தொடர்ந்து விடாத தொண்டர்க்கு அணியன'' என்பது திருமுறை களாலும், புராணங்களாலும் பெறப்படும்.

> ''திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
> உருநாமறிய ஓர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்''

என்பது திருவாசகம். வானோர்க்கும் ஏனோர்க்கும் அரிய சிவம் தனது பெருங்கருணையினால் அன்பர்க்காகத் தூது நடந்தும், மண்சுமந்தும், பிரம்படி பட்டும், விறகு விற்றும், வேடுவனாகி வில்லால் மொத்துண்டும் அவர்களை ஆட்கொண்ட வரலாறுகளைப் புராண வாயிலாக அறிய இயலுகிறது. அத்திருவிளையாடல்களை எண்ணிப்பார்க்கிறார் ஓர் புலவர். சிவபிரானது பாதாதி கேசத்தை வருணிக்கப் புகுந்த அவருக்கு அப் பெருமானின் ஒவ்வோர் அங்கமும் அவனது திருவிளையாடலை நினைவு படுத்துகிறது.

சொக்கநாதப் பெருமானின் திருவடிகள் இடைக்காடர் என்ற புலவருக்காக நடந்த வரலாற்றைக் குறிக்குமிடத்து,

> ''எந்தாயென் றேத்தும் இடைக்காடன் பின்போன
> செந்தாமரை போல் திருத்தாளும்''

என்பார். அப்பெருமானின் அழகிய தொடைகள், பாண்டியமன்னன் தனது கழுத்தை அரிவதைப் பொறுது மாறிநின்று ஆடியமையை நினைவு படுத்தும்போது,

''கழுத்தரியத் தென் பாண்டி நாடனுக்கு மாறித்
திரும்புமணிக்குறங்கும்'' என்பார்

தனது அடியானுக்கு எதிரியுடன் போர் செய்யக் கச்சுக் கட்டியது அவனது திருஇடையில் அன்றோ? இவ்வங்கம் வெட்டிய திருவிளையாடலை

''பணிக்கற்கு மாருப் படை யுடைவாள் சேர்ந்து
மணிக் கச்சுடுத்த மருங்கும்''

என்பார். வந்தி தந்த பிட்டை உண்டு பசிதீர்ந்த திருஉதரத்தை உடையவன் அச்சொக்கன். அதனை

''தொண்டு படுவந்தி சொரிந்திடும் பிட்டு அள்ளி அள்ளி
உண்டு பசி தீர்ந்த உதரமும்'' என்பார்.

அம்மை தமக்கில்லாதான் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகித் திருமுலைப் பால் ஈந்த கருணை, அவனது திருமார்பை எண்ணிப் பார்க்கையில் நினைவுக்கு வருகிறது. அதனை

''அண்டுமொரு தாய்முலைப் பால் உண்டறியாத் தாம்
பன்றிக்குட்டிகளின்
வாய் முலைப் பால் ஊட்டிய பூண் மார்பும்'' என்பார்.

ஆத்திசூடியாகிய ஆதிதேவன் அவ்ஆத்தியை வேண்டாது பாண்டிய மன்னனுகி வேம்பணிந்தது அத்திருப்புயத்தில் தான். அதனை

''பூம்படலை ஆத்திப்புனை மலரைப் பூணுமல்
வேம்பலரைப் பூண்ட வியன் புயமும்'' என்பார்.

சிவபெருமானது மறை பகர்ந்த திருவாய், மதுரையில் கரிக்குருவிசகு உபதேசம் செய்த எளிமையை எண்ணி
—''ஓம்புகொடி
வாதில் கரிக்குருவி வாழ்தற்கு உபதேசம்
காதிற் பகன்ற கனிவாயும்'' என்பார்.

ஆலவாய் அண்ணலின் செவிகள் தமிழை விரும்பிக் கேட்பனவாம், ஆகவேதாம், தாமே சங்கப்புலவராய் எழுந்தருளினன்போலும்! தமிழ் வாழும் கோயில் அவனது திருச்செவிகள் என்கிருர் புலவர்.

''—தீதில்சொல்
வாயிலா நீயிருந்து வாழும்படி உனக்குக்
கோயிலாத் தந்த குழைக் காதும்''.

என்று தமிழன்னையிடம் கூறுவார் அப்புலவர் பெருமான்.

சொக்கநாதப் பெருமானின் கருணைவிழிகளை எண்ணுகையில் அப்பெருமான், மாமனுக வந்து வழக்குரைத்து வணிகப் பெண்ணைத் தழுவிக் கண்ணீர் விட்டுத் துயர் போக்கிய திருவிளையாடலை நினைவில்

எழுகிறது. அக்கருணை விழிகள் அப்பெண்ணுக்காகக் கண்ணீர் பெருக்கிய எளிமையை எண்ணி நெகிழ்கிறார் புலவர். அதனை

''—போய் வணிகப்
பெண்ணீராள் கண்ணீர் பெருகத் தழுவித் தம்
கண்ணீரால் ஆற்றியருள் கண்களும்'' என்பார்.

இறுதியாகப் பெருமானின் திருமுடிகளை வருணிக்கப் புகுவார் புலவர். அத்திருமுடிகள் பிட்டுக்காக மண்சுமந்ததையே பின்வருமாறு அமைத்துப் பாடுகிறார்:

''—தெண்ணீரார்
பண்சுமந்த பாட்டினுக்கும் பாவைதந்த பிட்டினுக்கும்
மண்சுமந்த சோதிமணி முடியும்''

இவ்வுயரிய பாதாதிகேச வருணனைகள், ''மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடு தூது'' என்ற நூலின்கண் காணப்படுவனவாம். இது போன்றே திருநாவுக்கரசு நாயனாரும் தில்லையம்பலத்தானின் பாதாதிகேசத்தைப் பாடியுள்ளார். சிந்திப்பரிய சிவனாரது திருவுருவம், கசிந்துருகிச் சிந்திப்பவர் தமக்குத் தெவிட்டாத இன்பம் விளைவிப்பன. அத்திருவுருவைக் கண்ட கண்கொண்டு பிறிதொன்றையும் காண்பதென்னே என்னும் அப்பர் வாக்கும் இங்ஙனம் சிந்தித்து உருகுவோர்க்கே அறியப் பெறும்.

''எம்மானை மனத்தினால் நினைந்தபோது
அவர் நமக்கு இனியவாறே''

என்ற சுந்தரர் வாக்கும் இதன் உண்மையை உணர்த்தும்.

சிவ சிவ

---

## திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

தஞ்சைத் தரணியில் குடந்தைக்கு அண்மையில் உள்ள திருநாகேச்சரம் பாடல் பெற்ற திருத்தலமாகும். இது சேக்கிழார் திருவடி ஞானம் பெற்றதலம்; இப்பதியில் உள்ள அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில் இராசகோபுரமும், கட்ட கோபுரமும் தெய்வீக சிந்தனையுடைய அன்பர்களின் கூட்டுணர்வின் வழியாக அரசு மானியத்துடன் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றன. பங்குனித் திங்களில் குடமுழுக்கு நிகழவிருக்கிறது. ஆத்திக அன்பர்கள் இயன்ற அளவில் காணிக்கையளிப்பார்களாக!

அனுப்ப வேண்டிய முகவரி:-

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம்.

# சரித்திரம் படைக்கும் சங்கம் தொடங்கியது!

## தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்

இச்சங்கத்தின் நிர்வாகக்குழுக் கூட்டம் 1—11—'81ம் நாள் ஞாயிறு மாலை 6 மணி அளவில் திரு. பா. சோமசுந்தரம் பிள்ளை (துணைத் தலைவர்) அவர்கள் இல்லத்தில் நடைபெற்றது. இக்கூட்டத்திற்கு இருபதிற்கும் மேற்பட்ட நிர்வாகக் குழு உறுப்பினர்களும், சிறப்பு அழைப்பாளர்களும் வந்திருந்தனர். தலைவர். திரு. N. காங்கேயன் பிள்ளை அவர்கள், சைவ சித்தாந்தத்தைப் பற்றி விளக்கமாகவும், விரிவாகவும் 1½ மணி நேரம் பேசினார்கள். கீழ வயலூர், அம்பல், சீர்காழி கிளைகள் துவக்கம் சம்பந்தமாகவும், சங்க வளர்ச்சி சம்பந்தமான பிற செய்தி களும் பேசப்பட்டன. இக்கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் கொண்டு வரப்பட்டன.

1. திரு. காட்டூர் ராஜசேகரன், திரு. சிவசங்கரன், திரு. நரசிங்கமூர்த்தி ஆகியோரை இக்குழு நிர்வாகக் குழு உறுப்பினர்களாக ஏற்றுக் கொள்கின்றது.

2. நமது சங்க உறுப்பினர் திரு. இராமசாமி பிள்ளை மறைவிற்கும், அரசவைக் கவிஞர், கவியரசு கண்ணதாசன் அவர்கள் மறைவிற்கும் இக்குழு அனுதாபத்தினைத் தெரிவித்துக் கொள்கிறது.

2—11—'81ம் நாள் திங்கள் மாலை 5 மணி அளவில் தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கத்தின் கீழவயலூர் கிளையானது திருவிடை மருதூர் தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம், தலைவர், திரு. குஞ்சிதபாதம் பிள்ளை, அவர்கள் சீரிய தலைமையில் துவக்கி வைக்கப் பட்டது. மதுரை பல்கலைக் கழகம், திருக்குறள் ஆராய்ச்சியாளர், திரு. ச. தண்டபாணி தேசிகர், அவர்கள் திருவிளக்கேற்றி இச்சங்கத்தின் அலுவலகத்தைத்திறந்துவைத்து சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். அன்னாரைத் தொடர்ந்து, கும்பகோணம் தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம், தலைவர், திரு. காங்கேயன் பிள்ளை, அவர்களும், நாகப்பட்டினம் தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம், செயலர், திரு. திருநாவுக்கரசு பிள்ளை அவர்களும் உரையாற்றினர்.

இக்கிளையின் பொறுப்பாளர்களாகக் கீழ்க்கண்டோர் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்:- திரு. வீராசாமிபிள்ளை. செயலர்:- திரு. வ.சு. அருணசலம் பிள்ளை.

## சங்கமும் சாதனையும்

1971ம் ஆண்டு — திருவிடைமருதூரில் இச்சங்கம் தோன்றியது:

30—8—'81ல் — குடந்தையில் இச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டது;

19—9—'81ல் — நாகப்பட்டினம் கிளை ஆரம்பிக்கப்பட்டது.

2—11—'81ல் — கிழவயலூர் கிளை ஆரம்ப விழா நடைபெற்றது.

13—12—'81ல் — திருத்துறைப்பூண்டி கிளை ஆரம்ப விழா நடக்க இருக்கிறது.

20—12—'81ல் — கிவளூர் கிளை ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஜனவரி 1982ல் — அம்பல், ஆச்சாள்புரம், சிர்காழி கிளைகள் ஆரம்பிக்கப்பட உள்ளன.

பிப்ரவரி 1982ல் — திருவாரூர், மன்னார்குடி, பாபநாசம், வேதாரண்யம், தஞ்சாவூர் கிளைகள் ஆரம்பிக்கப்பட உள்ளன.

மார்ச் 1982 — மாவட்ட மாநாடு கூட்ட திட்டமிட்டுள்ளோம்.

### குடந்தைக் கிளை

24—11—'81ம் நாள் முடிய குடந்தைச் சங்கத்தில்

167 உறுப்பினர்கள் உள்ளனர்.

62 ஆயுள் சந்தா உறுப்பினர்கள்

105 ஆண்டுச் சந்தா உறுப்பினர்கள்

**குடந்தைச் சங்கத்தின் சாதனைகள்**

1. 10க்கு மேற்பட்டோருக்கு வேலை வாய்ப்புக் குழுவின் உதவியால் வேலை வாய்ப்பு தரப்பட்டது.
2. சுப, அசுப காரியங்களுக்காக இச்சங்கத்தின் உதவியை நாடிய வசதியற்ற இரு குடும்பத்திற்கு ரூ. 100 உதவித்தொகை வழங்கப் பட்டது.
3. நாகைக் கிளையைச் சார்ந்த, சிக்கலில் வாழ்ந்துவந்த, தாய் தந்தையரை இழந்த, ஆதரவற்ற நிலையிலிருந்த, 7 உறுப்பினர் அடங்கிய குடும்பத்தை, குடந்தைக்கு அழைத்து வந்து, இச்சங்கத் தின் உதவியால் நல்வழி காட்டப்பட்டுள்ளது.

# நல்லாசிரியருக்குப் பாராட்டு விழா

நமது சங்கத்தின் பொதுக்குழுக் கூட்டமும், தேசிய விருது பெறுகின்ற ஆசிரியர் திரு. எஸ். இரத்தினசபாபதி அவர்களுக்குப் பாராட்டு விழாக் கூட்டமும் கடந்த 6—12—'81 அன்று ஞாயிறு மாலை குடந்தை யதார்த்தவசனி திருமண மண்டபத்தில் பனசை ஸ்ரீ காசிமடத்துத் தலைவர், ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் திருமுன்னிலையில நிகழ்ந்தது.

திருமுறை இன்னிசையுடன் தொடங்கிய விழாவில் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் எஸ். மகாராஜன் அவர்கள் தலைமையேற்று அரிய சொற்பெருக்கினையாற்றினார்கள்;

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் வழங்கிய அருளுரையில் பீடுடைத் தேசிகனின் பேரருள்பெற குருவினை முதலில் உணர்ந்து அவர்காட்டிய நெறி நின்று, தம் மக்களையும் அவ்வழிப் படுத்தி சமூக ஏற்றத் தாழ்வுகளைக் களைந்து, ஒற்றுமையுணர்வுடன் ஓங்கிச் செழிக்க நல்லாற்றுப் படுத்தி நல்வாழ்த்து நல்கினார்கள்;

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் மேலும், சைவர்களுக்குள் உட்பிரிவுகள் ஒன்றாக—அவர்களுக்குள் மண உறவுகள் ஏற்பட வேண்டும் என திருவாய் மலர்ந்தருளினார்கள்; விழாவின் இறுதியில் திருவருள் திருநீற்றுப் பிரசாதத்தை அன்பர்கள் அனைவருக்கும் வழங்கினார்கள்;

விழாவில் திரு. கணபதி தேசிகர், திரு. தா. ம. வெள்ளைவாரணம், திரு. முத்தையன், திரு. வீ. ச. நடராசன், திரு து. சம்புகேசன், திரு. வ.சு. அருணாசலம் பிள்ளை, திரு. திருநாவுக்கரசு பிள்ளை, திரு. மணிவாசகம் ஆகியோரும் கலந்துகொண்டு நற்பண்பும், ஒழுகலாறும் கொண்டு நல்லாசிரியர் விருதினைப்பெறும் திரு. எஸ். இரத்தினசபாபதியைப் பலபடப் பாராட்டிப் பேசினர்.

தமிழ்ப் பண்ணொலி முழங்க விழா இனிதே நிறைவுற்றது.

என். காங்கேயன் பிள்ளை,
தலைவர்.

எஸ். திருநாவுக்கரசு எம். ஏ.,
செயலர்.

தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்,
கும்பகோணம்.

# விடையரங்கம்

வினா: ''உயிர்கள் பல; இவை அனைத்தும் பக்குவமடைந்து இறைவனடியைச் சார்கின்றன'' என்பது சைவ சித்தாந்த உண்மையாயின், ஒருநாள் உயிர்களே இல்லாமற் போய்விடுமா?

புலவர் மணி, வித்துவான்,
மு. ரெத்தின தேசிகர், திருவாரூர்.

மகாவித்துவான்
சி. அருணைவடிவேலு முதலியார்

விடை: "உயிர்களே இல்லாமற் போய்விடுமா'' என்ற வினவின பொருள் விளக்கமாக இல்லை. ஏனென்றால், 'உயர்சள் யாவும் இறுதியில் இறைவனடியைச் சார்கின்றன' என்பதே சைவ சித்தாந்த உண்மை என்பதாக வினாவிலேயே குறிக்கப்பட்டுள்ளது. உயிர்கள் எக்காலத்திலும் இல்லாமற் போவதாகச் சைவ சித்தாந்தம் குறிப்பிடவில்லை என்பது மேற் கூறியதினின்றும் தெளிவாகின்றது. அவ்வாறிருக்கும் பொழுது 'உயிர்கள் ஒரு காலத்தில் இல்லாமற் போய் விடுமா' -என்னும் ஐயத்திற்கு இடம் எங்கே உள்ளது? இல்லை. ஆகவே, 'உயிர்கள் இல்லாமற் போய்விடுமா?' என்றவினாவிற்குப் பொருள், 'இப்பொழுது உயிர்கள் உள்ளனவாக நாம் அறியும் நிலையில்இல்லாமற்போய்விடுமா? என்பதே எனக்கொள்ள வேண்டியுள்ளது.

அப்படியாயின், அஃது உண்மையே. நாம் இப்பொழுது அறிந்து வரும் நிலை முழுவதும் 'பெத்தம்' என்றும், 'பந்தம்' என்றும் பெயர் பெற்ற பிறப்பு நிலைதானே? உயிர்கள் இந்நிலையினின்றும் நீங்கி, வீடு அல்லது மோட்சத்தை அடைவது தானே இறைவனடியைச்சார்வதாகச் சொல்லப் படுகின்றது? அனைத்து உயிர்களும் மோட்சத்தை அடைந்துவிடும் நாள் என்று வரும்? எத்தனைக்கற்பங்கள் சென்றால் வரும்? என்று நம்மால் எண்ணிப் பார்க்கக்கூடஇயலாது.

அத்துணை நீண்ட நெடுங்காலத்திற்குப் பின்பு ஒரு நாளில் உயிர்கள் பிறவி எடுத்து உழலும் நிலையில் இல்லாமல் போய் விடுவதைப் பற்றி இன்று நாம் கவலைப்படுதல் வேண்டாத ஒன்றாகும்.

'பந்தம்' அல்லது 'பிறவி' என்பது மாபெருந் துன்பம் என்பதை ஒப்புக்கொள்ளுகின்ற நாம், இம்மாபெருந் துன்பத்தில்

ஒரு சில உயிர்களேனும் என்றும் இருந்தேயாக வேண்டும் என்று ஏன் கருத வேண்டும்?

அனைத்துயிர்களும் இம்மா பெருந்துன்பத்தினின்று நீங்கி, இறைவன் திருவடி நிழலில் இனிதிருந்து, அவனது 'மாளா இன்ப மாகடலில்' திளைத்திருப்பதால் யாருக்கு, என்ன இழப்பு? அவ்வின்பத்தை அடையாது பிறவிப் பெருந்துன்பக் கடலில் வீழ்ந்த உயிர்கள் அலமருவது தானே பலருக்கு வருத்தத்தைத் தருவதாதலுடன், இறைவனது பெருங்கருணைக்குக்கூட ஏதோ ஒரு குறைபோலத் தோன்று கின்றது. இந்நிலை என்றுமே அற்றுப் போகாமல் சிறிதளவாவது இருந்துதான் ஆக வேண்டும் எனக் கருதுவது இறைவனது கருணைக்குக் கூட முழு ஏற்றத்தைத் தருவதாகாது.

ஆகவே என்றேனும் ஒரு நாள் 'பிறவி' என்னும் பெருந்துன்பத்தை உடைய உயிர் ஒன்றேனும் இல்லாமல் அனைத்துயிரும் இறைவன் திருவடி நிழலில் அமர்ந்து, அவனது எல்லையில் இன்பக் கடலில் திளைத்திருக்கும் நாள் வரும்; அந்த நாளே நிறை நலம் பெற்ற நன்னாளாகும்; இறைவனது திருவருளும் தனது பூரணப் பெருஞ்சிறப்பை விளக்கி நிற்கும் நாளாகும் என்பதே சைவ சித்தாந்தம். இவ்வாறு, சொல்வதால் சைவசித்தாந்தத்திற்கு எந்தக்குறையும் இருப்பதாகத் தெரியவில்லை. மாறாக, மிக்க பெருமையே இருப்பதாகத் தெரிகின்றது.

ந. ரா. முருகவேள் M.A., M.O.L.,

''ஒருநாள் உயிர்களே இல்லாமற் போய் விடுமா?'' என்று வினவுதல் பிழையே. உயிர்கள் எவ்வாறு இல்லாமற் போகும்? உயிர்களின் கட்டு நிலைதான் இல்லாமற் போகும் உயிர்களுக்குக் கட்டு நிலை இல்லாமற் போகச் செய்வதனால், இறைவனுக்கு நேரும் குறை ஒன்றும் இல்லை. ''தொழுவார் அவர் துயராயின தீர்த்தல் உன தொழிலே'' என்றபடி, உயிர்களின் கட்டு நிலையைப் போக்குவதுதானே இறைவனுக்குரிய இயல்பும் தொழிலும்! ஆதலின், உயிர்களின் கட்டுநிலை அகன்றாலும், ''உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே'' என்றபடி வீட்டு நிலையில் உயிர்களுக் கெல்லாம் சிவானுபவத்தினை நுகர்வித்துக் கொண்டிருத்தல், இறைவனுக்குரிய தொழிலாக அமையும்.

''ஒருநாள் உயிர்களே இல்லாமற் போய்விடுமா?'' என்று கவலையுறுபவர்களின் கவலையைப் போக்கும் வகையிலேயே ''பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும், துறந்தோர் துறந்தோர் துறப்போர் தொகை'' என்று திருவருட்பயனில் உமாபதிசிவம் விடையருளிச் செய்துள்ளார்.

உலகத்திற்கு ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் சூரியன், இன்னும் 15 மில்லியன் ஆண்டுகளில் ஒளிபரப்பும் ஆற்றல் குன்றிச் சிறிது சிறிதாகத்தேய்ந்து மாய்ந்து விடக்கூடும் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

"The sun loses 250 million tons of mass every minute and there is no known source of replenishment which can supply new mass to it, at even a small fraction of this rate. Neither the sun nor any other star can continue radiating away its mass at such a rate for ever. The sun possesses enough mass to continue to radiate at its present rate only for 15 million years......"

Sir James Jeans:
Astronomy & cosmogony:

இஃது உண்மையாகவும் இருக்கலாம். அல்லது மாறாகவும் இருக்கலாம். உண்மையாகவே இருப்பினும், நாம் கவலைப்பட்டு என்ன செய்ய இயலும்? நம்மால் எதனையும் செய்ய இயலாத தொன்றிற்காக நாம் கவலையுறல் வேண்டுவதில்லை. அதுபோலவே, உயிர்கள் எண்ணில்லாதனவாகலின் தொடர்ந்து இருந்து கொண்டேயிருப்பினும், அல்லது ஒரு நாள் உயிர்களே இல்லாமற் போயினும், அதுபற்றி நாம் கவலைப்படுவதற்குக் காரணம் ஏதும் இல்லை. இறைவனுக்கு நேரக்கூடிய குறையும் ஒன்றில்லை.

## ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

5—11—81 வரை கூடுதல் 13, 188-60

| | | |
|---|---|---|
| 1. | திரு. K. M. தங்கவேல் பிள்ளை பெண்ணுகடம் | 101-00 |
| 2. | " R குஞ்சிதபாதம் பிள்ளை " | 105-00 |
| 3. | " T. M. வெள்ளைவாரணம் திருப்பனந்தாள் | 5-00 |
| 4. | " தி. சு. மாரிமுத்து திருச்செங்கோடு | 20-00 |
| 5. | " A. இராதாகிருஷ்ண பிள்ளை பெண்ணுகடம் | 25-00 |
| 6. | துர்க்கா குடில் திரு. அப்பு குடந்தை | -00 |
| 7. | திரு. S. R. வெங்கட்ராம், அடையார் சென்னை | 5-00 |
| 8. | " அப்பு அய்யர் கோட்டூர் | 10-00 |
| 9. | " கலியமூர்த்தி " | 10-00 |
| 10. | " வை. குமாரசாமி செங்குந்தபுரம் | 3-00 |
| 11. | " ம. கோவிந்தன் " " | 3-00 |
| 12. | " அருணாசலம், உக்கரை | 5-00 |
| 13. | " இராமசாமி கச்சப்பெருமாநத்தம் | 3-00 |
| 14. | " S. ஸ்ரீநிவாஸன் பெரம்பூர் | 5-00 |
| 15. | குமாரி உமா D/o G. கெங்காதரன் குந்தா | 3-00 |

8—12—81 வரை கூடுதல் 13, 496-60

# விஷுவச்சாயை

ஜோதிஷம் A. இராசமாணிக்கம் திருப்பனந்தாள்.

நாம் ஜாதகக்கணிதங்களில் ஒவ்வொருவர் ஜனன காலத்தையும் சரியாகக்கணித்து நிர்ணயிப்பதற்கு திருக்கணிதபஞ்சாங்கத்தில்குறிப்பிட்டுள்ளபடி அட்சாம்ஸம் ரேகாம்ஸம் விஷுவச்சாயை (பலச்சாயை) ஆகியவற்றை முன்அறிந்து பின் அதன்மூலமாக ஓர் இஷ்டமான இடத்திற்கு அதாவது சுயதேச அட்சாம்ஸத்துக்கு கணக்கிடப்பட்ட இராசிமானங்களை எடுத்து இலக்கினத்தல் செல்நாழிகை வினடிகளையும் அறிந்து இலக்கின ஸ்புடம் சரியாக செய்துக்கொள்ள வேண்டும்.

## விஷுவச்சாயை

ஓரிடத்தின் விஷுவச்சாயை தெரிந்தால் அந்த இடத்தின் அக்ஷாம்ஸம் என்னவென்று கணக்கிட்டு அறியலாம். அக்ஷாம்ஸம் தெரிந்தால் அந்த இடத்தின் விஷுவச்சாயையை அறியலாம். அக்ஷாம்ஸத்துக்கு புஜஜ்யா கோடிஜ்யா ஏற்படுத்தி, புஜஜ்யாவை சங்கு பிரமாணம் 12 அங்குலத்தினல் பெருக்கி, கோடிஜ்யாவினல் வகுக்க ஈவு விஷுவச்சாயாங்குலம். மீதியை 60ஞல் பெருக்கி கோடிஜ்யாவினல் வகுத்த ஈவு வியாங்குலமாகும்.

இந்த விஷுவச் சாயையினல்தான் இஷ்ட பிரதேச அட்சப்பாங்கைகளுக்கு சரகண்டம் இலக்கின மானங்களைக் கணிதம் செய்யப்படுவதாகிறது.

பஞ்சாங்கத்தில் ஒரு குறிப்பிட்ட மத்திய ஸ்தானத்துக்கு இலக்கின மானங்களின்படி தினசரி உதய லக்கின பாக்கியைக் கணக்கிட்டு குறிப்பிடப்பட்டிருக்கும். அந்த உதய லக்கின பாக்கியை இஷ்ட பிரதேச உதய லக்கினமானத்தால் பெருக்கி பஞ்சாங்கம் எந்த மத்திய ரேகைக்குக் கணிக்கப்பட்டதோ அந்த இடத்தின் உதயலக்கினமானத்தால்வகுத்து இஷ்டபிரதேச உதய லக்கினபாக்கியைக்காணவேண்டும் பின்னர் ஜனன நாழிகை வரை இஷ்டபிரதேச இலக்கினமானங்களைத் தள்ளி இலக்கினத்தில் செல் நாழிகை விஞடி சரியாக அறிந்து இலக்கின ஸ்புடம் செய்தல் வேண்டும்.

## இலக்கினஸ்புடம்

சாதாரணமாக மேஷம் மீனம் $4\frac{1}{4}$, ரிஷபம் கும்பம் $4\frac{3}{4}$, மிதுனம் மகரம் $5\frac{1}{4}$, கடகம் தனுசு $5\frac{1}{2}$, சிம்மம் விருச்சிகம் $5\frac{1}{4}$, கன்னி துலாம் 5. என்னும் பாடம் அவசரமாகக் கொள்லதற்கு ஒரு வாய்பாடாகஉள்ள கணக்கு ஆகும்.

பஞ்சாங்கத்தில் ஒவ்வொரு அக்ஷாம்ஸ ரேகைக்கும் நிரயன சாவன லக்கினமானம் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அவற்றை உபயோகித்து இஷ்ட பிரதேசங்களுக்கு இலக்கின ஸ்புடங் களைச் செய்ய வேண்டியது அவசியமாகும்.

## இலக்கின நிச்சயம்

சில சந்தர்ப்பங்களில் இலக்கினத்துக்கு அந்தமாக நாழிகை வினடி வரும். எந்த ல்க்கினம் என காணத்திணரலாக இருக்கும். இலக்கினம் மாறினல் ஜாதகனின் குணுகுணங்கள் யோகபாவங்கள் மாறுதலாகி விடும். ஜாதக ரீதியாக நடக்கவேண்டிய பலன் ஒன்றிருக்க வேறொரு பலன் நடக்கும் ஆகையால் அவ்வித ஜாதக விஷயத்தில் இலக்கின நிச்சயம் செய்து வைப்பது ஒரு சோதிடரின் கடமையாகும்.

அது செய்யும் விதம் எப்படியெனின் ஜெனன நாழிகையை 6 ஞல் பெருக்கி அந்த மாதம் ஜெனனமான தேதிவரையிலும் கூட்டி வந்த மொத்தத் தொகையை 30ஞல் வகுக்கவந்த ஈவு எத்தனையோ அதனை சூரியனிருக்கும் இராசிமுதலாக எண்ணி வர அத்தனையாவது ராசியே லக்கினமாகும். இவ்வாறு இலக்கின நிச்சயம் செய்ய வேண்டியது அவசியமாகும்.

இவ்விஷயமாக ஜாதக அலங்காரத்தில் பாயிரம் 14

''செய்யதோர் பலபாகம் பகர்வதற்கேயிரவி
தேசதேசத்தின் விழுச்சாயை தெரிந்தெண்ணித்
தப்பறவே கண்டருளுஞ் சரபிண்டத்தொகையின்
றகைமை பெறமருவியிலக்கினங் கடமையறிந்தே
ஒப்புடன் லக்கின சந்து கண்டாலக்காலே
யுயர் கடிகாலக்கின சுத்திகளுணர்ந்து கண்டு
விப்பிரர் சோதிட வல்லோர் சரணமதைப் போற்றி
விளம்பினர்க்குப் பலபாகம் விளங்குமிகத்தானே''

என்று விளம்பியிருப்பதைக் காண்க. எனவே மேற்கண்ட கணித விஷயங்களை அறிந்து முறையுடன் கணிதம் செய்து பார்த்து ஜாதகம் எழுதவேண்டியது அவசியமாகும்.

****************

# திருவழக்கு

****************

## 'ஞானம்'

ஆரூரன்: அது எப்படி முடியும்மா-நான் அந்தண தலத்திலே பிறந்து அரசனுக முடியுமா-நினைவில் கூடமுடியாத ஒன்றை நீங்க சொல்றீங்களே

சடையனுர்: ஆம் மகனே - நினைக்கமுடியாத ஒன்றை இறைவன் செய்கிறுர்.

''ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றுகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்-ஒன்றை
நினையாது முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்''

என்பது போலக் கடவுள் அருளால் நடக்காதது ஒன்றுமில்லை நாளைக்கு நீ மன்னனுக்குச் சுவீகாரப்புத்திரனுவாய். வருங்கால மன்னவன் என்ற இது மன்னவனே அனுப்பிய செய்தி நாம் நாளை அரண்மனைக்குப் போவோம். அங்கு உண்மை அறிவாய்.

ஆரூரன்: அம்மாவும் அப்பாவும் கூடவே இருப்பேளா அப்படியானுல் உங்கள் விருப்பம்தான் என்விருப்பம் அவனன்றி அணு வசையுமா

சடையனுர்: நாளை நாம் மூவரும் அரண்மனைக்குப் போகவேண்டும்

ஆரூரன்: அப்படியே செய்வோம்.

### அங்கம் 3

அரச சபை-மன்னன் கொலுவிருத்தல்

நாட்டியம் பல்லவி

வருவார் அழைத்து வாடி வடலூர் வடதிசைக்கே
வந்தால் பெறலாம் நல்ல வரமே — (வருவார்)

அனுபல்லவி

திருவார் பொன்னம் பலத்தே செழிக்கும் குஞ்சிதபாதர்
சிவசிதம்பர போதர்-தெய்வ சபா நாதர் — (வருவார்)

சரணம்

சிந்தை களிக்கக் கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோரெல்லாரும் தொண்டு செய்ய பரிவுகொண்டு
இந்த வெளியில் நடம் இடத்துணிந்திரே அங்கே
இதைவிட பெருவெளி இருக்குதென்றால் இங்கே— (வருவார்)

2

இருக்கில்லாமல் இருக்க இடமுண்டு நடம் செய்ய
இங்கம்பலம் ஒன்றங்கே எட்டம் பலம் உண்டைய
ஒடுக்கில் இருப்பதென்ன உளவு கண்டு கொள்வீர்
உண்மை இது வஞ்சமில்லை உன்மேல் (என்னால்)
ஆணை என்று சொன்னால் — (வருவார்)

மன்னன்: தேவி–நமக்கு இறைவன் எல்லா பாக்கியமும் கொடுத்தார் ஏனோ புத்திர பாக்கியம் ஒன்றுமட்டும் கொடுக்கவில்லை.

தேவி: என்னசெய்வது-அதுதான் எனக்கும் பெருங்கவலை இறைவன் என்றுதான் கண்திறந்து பார்ப்பாரோ அன்றுதான் நமது கவலை திரும்

மன்னன்: வருங்காலத்தில்-எனக்குப்பிறகு-இந்த அரசை நல்லமுறையில் நடத்த ஒரு நல்ல அரசன் வேண்டுமல்லவா மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்பர்-அதன் பொருட்டு ஒரு நல்ல ஏற்பாடு செய்திருக்கிறேன்.

தேவி: என்ன ஏற்பாடு சுவாமி. நான் அதை அறியலாமா?

மன்னன்: அதோ அவர்கள் வந்துவிட்டார்கள். செய்தி நீயே தெரிந்துகொள்ளுவாய். (காவலன் வருதல்)

காவலன்: மன்னவா–வணக்கம்.

மன்னன்: என்ன செய்தி

காவலன்: வெளியே-ஒரு அப்பா–ஒரு அம்மா–ஒரு பையன் மூவரும் வந்திருக்காங்க-உங்களைப் பாக்கலாமாண்ணு நம்ம அமைச்சர் ஐயா கேட்டாருங்க கட்டளை எதுவோ

மன்னன்: அப்படியா அவர்களை உடனே வரச்சொல்:

( சடையனுர் – இசைஞானியார் – ஆரூரர் – அமைச்சர் முதலியோர் வருதல்)

அமைச்சர்: அரசே வணக்கம்

மன்னன்: என்ன விசேடம் அமைச்சரே.

அமைச்சர்: அன்று தாங்கள் தெருவில் பார்த்த குழந்தை-ஒரு அந்தணக்குழந்தை அவன் தந்தையார் சடையனுர் தாயார் இசைஞானியார் அவர்களை அழைத்து வந்திருக்கிறேன். தங்கள் கருத்தையும் சொல்லிச் சம்மதத்துடன் அவர்கள் இங்கு வந்திருக்கிறுர்கள்.

(வந்தவர்கள் வணங்குதல்)

மன்னன்: வரவேண்டும் நீங்கள் எங்கு வசிக்கின்றீர்கள்? அமைச்சர் எமது கருத்தினைத் தங்களிடம் விளக்கிக் கூறியிருப்பார்; தங்கள் விருப்பம் எதுவோ அறியலாமா.

சடையனுர்: தாங்கள் மடவளாகத்தில் இரண்டாம் இல்லத்தில் வசிக்கிறோம். அமைச்சர் யாவும் விளங்க உரைத்தார்; தங்கள் சித்தமே எங்கள் பாக்கியம் தங்கள் விருப்பப்படி ஆரூரனை அபிமான புத்திரனுக ஏற்றுக்கொள்ளுங்கள். இறைவன் அருளால் உங்கள் விருப்பத்துக்கு நாங்கள் ஒத்துக்கொள்ளுகிறோம்.

மன்னன்: அப்படியா ...... மிக்க மகிழ்ச்சி ..... இன்று முதல் இப்பொழுதுமுதல் ஆரூரன் எமது அபிமான புத்திரன் வருங்கால மன்னன். விரைவில் இளவரசாவான், சரிதானே தேவி, நீ என்ன சொல்லுகிறுய்.

தேவி: இந்தக் குழந்தை - நம்மை ஆட்கொண்ட சிவபெருமான் கோலமாகவே காணப்படுகின்றுன். இப்போதே அவன் என் குழந்தை என்ற ஆர்வம் தோன்றுகிறது. எம்பெருமான் திருவருளின் பெருமையே பெருமை. பலநாள் வாட்டிய நமது பெருங்கவலை நீங்கியது.

மன்னன்: மிக்க மகிழ்ச்சி இந்த நற்செய்தியை அமைச்சரே 'நாட்டுக்கு அறியப்படுத்துங்கள்.

அமைச்சர்: அப்படியே

( வெளியில் முரசம் அறைதல் )

டும்—டும்—டும் பொதுமக்களே!பெரியோர்களே! தாய்மார்களே! இதன்மூலம் யாவருக்கும் தெரியப்படுத்துவதாவது ... நமது நாட்டில்

... வாழும் ஆதிசைவர் சடையனுர் என்பவருக்கும் அவர்தம் மனைவியார் இசைஞானியாருக்கும் பிறந்த மகன் நம்பி ஆரூரன் என்னும் பிள்ளையை ... நமது மன்னவர் ... ஸ்ரீ ராஜ ராஜ- நர சிங்கமுனையர் தமது அபிமான புத்திரராக இன்று ஏற்றுக்கொள்ளுகிருர். இனி அவரே தமது இளவரசராவார். இதனை யாவரும் அறிவீர்களாக...

டும்-டும்-டும்... வாழ்க நம் மன்னர்.

நரசிங்கமுனையர் வாழ்க வாழ்க.

வாழ்க இளவரசர் நம்பி ஆரூரர். ( முரசம் கொட்டுதல் )

வாழ்க வாழ்க

## அங்கம் 4

(ஆரூரர் வித்தைப் பயிற்சி)

சேனுதிபதி; இளவரசே வெகுநன்ருய் அம்பு தொடுக்கிறீர்கள். அதோ ஓடும் அந்த மானைப்பிடியுங்கள். உம் சற்று வேகமாய்...சற்று இடப்புறம் நின்று.

ஆரு;- அதை எப்படியும் பிடிக்கிறேன் (அம்பு தொடுத்தல்) ஆஹா சிறிது தவறிவிட்டது இதோ மறு அம்பு தொடுக்கிறேன் பாருங்கள்.

வீரர்;- இளவரசே கொஞ்சம் பொறுங்கள் அதோ ஒரு யானை வருகிறது. வில்லை வளைக்கிறீர்களா? இல்லை ஈட்டியை எடுக்கிறீர்களா?

ஆரு:- இதோ வேலையே அனுப்புகிறேன் - ய்........... (வேல் யானையைக் குத்துகிறது )

சேனு: இளவரசே மிக்க பாராட்டு. வேலைச் சரியாகக் குறிவைத்தீர் சபாஷ் யானை விழுந்து விட்டதே வெற்றியோ வெற்றி.

வீரன்: நமது இளவரசர் யானை ஏற்றம் குதிரை ஏற்றம் வில், வாள் கதை எல்லா பயிற்சியும் மிகத்திறமையாகவும் மிக விரைவிலும் கலைகளைக் கற்றுக் கொள்ளுகிருர்.

சேனு: நேரமாகிறது நீங்கள் யானை எய்த வெற்றியை அரசருக்கு அறிவிப்போம். வாருங்கள் போகலாம்.

ஆரு; இருட்டி தான் விட்டது. இனி அரண்மனைக்கே போகலாம்.

(வளரும்)

உ

# சிவப்பிரகாசம்

## தெளிவுரை

### காப்பு

#### மூத்த பிள்ளையார்

ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு
களிஆர வரும்யானை கழல்நாளும் மறவாமல்
அளி ஆளும் மலர் தூவும் அடியார்கள் உளமான
வெளி ஆகும் வலிதுஆய வினைகூட நினையாவே.

(தெளிவுரை) பேரொளிப் பிழம்பாக விளங்கும் திருவுடலையும் பொழிகின்ற மத நீரையும் மிகுகின்ற இன்பத்தையும் கொண்டு அன்பால் நினையும் அடியவர் உளத்து எழுந்தருளி வரும் யானை முகத்தவராய மூத்த பிள்ளையாரின் திருவடிகளை, எப்பொழுதும் மறவாமல் வண்டுகள் மொய்த்தற்குரிய மலர்களைத் தூவி வழிபடு கின்ற அடியவரது உளத்தின்கண் ஆணவ இருள் நீங்கி மெய்யுணர்வு விளங்கும். கொடிய வினைப் பகுதிகளும் அவ்வடியவரிடத்துச் சேர நினையா என்பதாம்.

வினையின் நீங்கி விளங்கிய அறிவினனுகுதலின் 'ஒளியான திருமேனி' என்றுர். மூத்த பிள்ளையாரின் திருவுருவில் முகம் ஒன்றே யானை யின் உறுப்பினதாம். எனவே அதனின்றும் பொழியும் மத நீர் அறி வாற்றலும் (ஞானசக்தி) செயலாற்றலும் (கிரியாசக்தி) ஆகிய மத நீரேயாம். இடையீடின்றியும் துன்பக் கலப்பின்றியும் விளங்கும் இன்பமே வடிவாதலின் 'மிக மேவு களி' என்றுர். களி-இன்பம். ஆர-முழுமையாகப் பொருந்த. வரும்-அடியவர் உளத்து எழுந்தருளி வரும். அளி-வண்டு. வண்டுகள் மொய்க்குமுன் கொணர்ந்து இடும் மலரே வழிபாட்டிற்கு உதவுவதாம். 'உண்பதன் முன் மலர் பறித்திட்டு உண்ணுராகில்' என்னும் திருவாக்கும் காண்க. ஆதலின் வண்டுகள் மொய்த்தற்குரிய மலர் எனக் கூறப்பட்டது. அளிஆளும் மலர்-அன்பு முதலாகக் கூறப்படும் எண்வகை மலர்கள் எனப் பொருள் கொள்வர் சிந்தனை உரைகாரர். எண்வகை மலர்களாவன அன்பு, கொல்லாமை, பொறியடக்கம், வாய்மை, பொறை, அருள், அறிவு, தவம் என்பன

வாம். 'எட்டுக் கொலாம் அவர் சூடும் இனமலர்' எனும் திருவாக்கும் காண்க. வெளியாகும்- அறியாமை அகன்று மெய்யுணர்வு தழையும். வலிது ஆய வினை- கன்மம் மாயை என்பன. பெருமானின் அறிவாற்றலால் அறியாமை நீங்கும். செயலாற்றலால் இம்மாயை கன்மம் நீங்கும். எனவே மூத்த பிள்ளையாரின் திருவடிகளை வணங்குவார்க்கு மல நீக்கமும் சிவப்பேறும் கிட்டும் என்பது கருத்து.

## மங்கல வாழ்த்து

### கூத்தப் பெருமான்

1. ஓங்கு ஒளியாய் அருள்ஞான மூர்த்தி ஆகி
உலகம்எலாம் அளித்தருளும் உமைஅம்மை காணத்
தேம்கமழும் மலர்இதழித் திங்கள் கங்கை
திகழ் அரவம் வளர்சடைமேல் சேர வைத்து
நீங்கல் அரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றுஇமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமலம் மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம்.

(தெ-ரை) பேரொளியாய் அருள் வழங்கும் மெய்யுணர்வே வடிவமாகி, உலகனைத்தையும் காத்தருளும் உமையம்மையார் கண்டு மகிழுமாறு நறுமணம்பொருந்திய கொன்றைமாலையையும்திங்களையும் கங்கையையும் விளங்குகின்ற பாம்பையும் நீண்ட சடையின் மீது பொருந்த வைத்துத் தடுத்தற்கரிய பிறவித் தொடர்பு நீங்குமாறு திருச்சிற்றம்பலத்துள் நின்று தேவர்களும் போற்றிப் பரவ, திருக் கூத்தைச் செய்தருளும் பொலிவு பெற்ற தாமரை மலரனைய திருவடிகள் எம்முடைய தலையின் கண்ணும் உளத்தின் கண்ணும் பொருந்துமாறு வணங்கிப் பரவுதல் செய்வாம்.

கதிரவன் திங்கள் நெருப்பு முதலிய ஒளி தரும் பொருள்களுக் கெல்லாம் ஒளி தந்து விளங்கும் பேரொளியாய் நிற்றலின் 'ஓங்கொளியாய்' என்றார். பிற ஒளிகள் காலத்தானும் இடத்தானும் வேறுபடும்: மாறுபடும். இப்பேரொளியோ நிலைத்து நிற்கும். 'மெய்ஞ் ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே', 'தேயமார் ஒளிகளெல்லாம் சிவன் உருத் தேசதென்னுர்' என்னும் திருவாக்குகளும் காண்க. ஓங்கு ஒளியாய், அருள்ஞான மூர்த்தி ஆகி என்ற இரு தொடர்ப் பொருளையும் உமையம்மைக்கு ஏற்றி உரைப்பாரும் உளர். இறை

வனது திருக்கூத்தின் பயனை உயிர்கள் நேரே பெறத்தகவுடையன அல்ல. எனவே அதனைத் தான் பெற்று உயிர்கட்கு ஊட்டும் கருணைப் பெருமாட்டியாய் உமையம்மை விளங்குகிறார்.

'பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பின் நானில வளாகமும்
ஏனைப் புவனமும் எண் நீங்கு உயிரும்
தானே வகுத்தது உன் தமருகக்கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுஉன் அமைத்தபொற் கரமே
தோற்றுபு நின்றஅத் தொல்லுலகு அடங்கலும்
மாற்றுவது ஆரழல் வைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று
ஊட்டுவது ஆகுநின் னூன்றிய பதமே
அடுத்தவின் உயிர்கட்கு அளவில் பேரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழில் ஐந்துநின் மெய்த்தொழி லாகப்
பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக்கு இன்னருள் கிடைப்ப
வையம்ஈன்று அளித்த தெய்வக் கற்பின்
அ நள்கூற் கொண்ட வையரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த'

எனக் குமரகுருபர அடிகள் அருளுவதும் காண்க.- தேம்- நறுமணம். இதழி- கொன்றை. ஐந்து இதழ்களை உடையது இது. பிரணவ வடிவத்தை அடக்கிக் கொண்டு இருத்தலின்இதனைப் பிரணவ புட்பம் என்பர். 'கண்ணி கார் நறுங் கொன்றைகாமர், வண்ண மார்பில் தாரும்கொன்றை' எனப் புறப் பாட்டும் கூறும். பிரணவம் மறைகள் முதலிய அனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு இருப்பது. அதனை இறைவன் தன்னுள் அடக்கி நிற்கிறான். இது பொன்மய மானது. உலகியற் பொருள்களுள் பொன்னினும் பிறிதொன்று இல்லை. அதைப் போன்றே இம் மலரணிந்த பெரியனினும் வேறு பெரியார் எவரும் இல்லை. 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்பதும் காண்க. இதன் கண் உள்ள ஐந்து இதழ்களும் திருவைந்தெழுத்தை

நினைவு கூரச் செய்வதாகும். இத்தகைய உயர் பொருளையன்றி உலகியற் சூழலில் கட்டுண்டு மொத்துண்டு நிற்கும் பொருளையும் காக்கும் கருணையாளன் என்பது காட்டத் திங்களையும் வைத்துள்ளான் இறைவன். 'நீர்மிகின் சிறையும் இல்லை' என்பர். ஆனால் அருளியல் அதற்கு அப்பாற்பட்டது. ஈங்குத் தருக்குற்று வந்த கங்கையையும் தலைக்கண் வைத்த அருமை காண்டற்குரியது. பகைவரையும் அவர் பகைமை நீக்கிக் காத்தருளும் தகைமை காட்டத் திகழ் அரவம் சேர வைத்ததையும் குறித்தார். நச்சுத்தகைமை மாறியமை குறிக்கத் 'திகழ் அரவம்' என்றார். 'பாம்பொடு திங்கள் பகை தீர்த்து ஆண்டாய்' என்ற திருவாக்கும் காண்க. இறைவனின் திருவடித் துணை இன்றித் தானாக நீக்கிக் கொள்ளல் அருமையின் 'நீங்கலரும் பவத் தொடர்ச்சி' என்றார். 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்ற திருவாக்கும் காண்க.

### சிவகாமி அம்மையார்

2. பரந்தபரா பரைஆதி பரனது இச்சை
 பரஞானம் கிரியைபர போக ரூபம்
தரும்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
 தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்த உபா தானங்கள் மேவி ஒன்றாய்
 விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்து
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல்காணும்
 அன்னை அருட்பாதமலர் சென்னி வைப்பாம்.

(தெ-ரை) யாண்டும் நீக்கமற நின்றிலங்கும் மேலான பரா சத்தி, ஆதிசத்தி, இறைவனது இச்சா சத்தி, மேலான ஞானசத்தி, கிரியா சத்தி எனும் ஐவகை நிலையில் வைத்து அறியப்படுவதாய், உயிர்களுக்கு மேலான இன்பத்தை அருளும் கருணை வடிவினதாய், தூமாயையாயும் தூய்தல்மாயையாயும் உள்ள உடல் கருவி உலகு நுகர்வு ஆகிய பொருள்கட்கு முதற்காரணமாக விளங்கும் விந்து மோகினி மான் என்னும் மூன்றையும் பொருந்தி, உயிர்களை ஈடேற்றுதற்கெனப் பல்வேறு நிலைகளைப் பொருந்தினும் தான் ஒன்றேயாய், மலப்பிணிப்பு இலதாய், இறைவனது ஐந்தொழிற்கும் காரணமாய், உலகின்கண் உள்ள உயிர்களது பிறவித் துன்பம் ஒழியுமாறு பொற்சபையில் ஆடும் கூத்தப் பெருமானது திருக்கூத்தினைக் கண்டு அருளுகின்ற சிவகாமி அம்மையாரின் அருள்பொழியும் திருவடி மலர்களைத் தலைக்கு அணியாக வைத்து வணங்குவாம்.



# திருவிளையாடற் புராணம்



உரை நடை

**வழக்கு முடிவில் ஞாதிகள் இவர் தனபதி அல்லர் என்றல்**

நரைத்த முதிய புலியினைப் போன்ற வணிகமூர்த்தியின் சொல்லைக் கேட்ட சபையார்கள் நடுங்கி, இருதிறத்தாருடைய வழக்கினையும் ஏற்றுக்கொண்டு [1]அநுவாதஞ் செய்து இரண்டு வழக்குகளையும் தடை விடைகளால் கேட்டு அவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து உண்மை தெரிந்து, ''தாயத்தாரின் வழக்குப் பொய் வழக்கு'' என்று முடிவு கூறினர்.

தாயத்தார்கள் அது கேட்டு அச்சமுற்று வேறு வகையிலே தம் வழக்கைக் கூற முயன்று, 'இவர் தனபதிச் செட்டியார் அல்லர்' என்றார்கள்.

**வணிகமூர்த்தி அவரவர் செய்திகளை விடாமல் கூறல்**

அப்பொழுது இறைவராகிய தனபதிச் செட்டியார் இருகைகளையும் கொட்டிச் சிரித்து, அவரவர் குடிப் பெயரும், பட்டமும், காணியும், தந்தை, தாய், மாமன், மாமி, தாயத்தார், அவர்களைப் பெற்றவர், பிள்ளைகள், உடன் பிறந்தார், மனைவியர், சுற்றத்தார் என்பவர்களுடைய பெயர்களும், அவரவர் குணங்களும் செய்தொழில்களும், பிறவும் முன்னுள்ள படியே சிறிதும் வழுவா வண்ணம் முறைப்படி மொழிந்தனர்.

**நீதிசபையார் தீர்ப்பைக் கேட்டு ஞாதிகள் சபைவிட்டு நீங்கல்**

அதனைக் கேட்ட பெரியோரனைவரும் ஞாதிகளைப் பார்த்து, ''இவர் அந்தத் தனபதிச் செட்டியாரேயாவர்'' என்றார்கள். உடனே தாயத்தார்கள், ''நம் வழக்குத் தோற்றது; இதனைப் பாண்டியன் அறிந்தால் நம்மைத் தண்டிப்பான்'' என்று கருதி, ''வீட்டிற்குச் சென்று வருகிறேன்'' என்றும், ''குளத்திற்குச் சென்று விரைவில் வருகிறேன்'' என்றும் ஒவ்வொரு வார்த்தை கூறிவிட்டுப் பெருங் காற்றுத் தள்ளுதலால் சிதறியோடும் மேகங்களைப்போலக் கலைந்து ஓடிப்போய் விட்டார்கள்.

**நீதிமன்றத்தார் தீர்ப்பும் வணிகமூர்த்தி மறைதலும்**

அத்தாயாதிகள் போனவுடன் அங்கிருந்த அறங்கூறும் அவையினர், 'தனபதிச் செட்டியார் முன் கொடுத்த பொருள்களனைத்தும்

---

1. அநுவாதம்– முற் கூறியதனைப் பின்னும் எடுத்துரைத்தல்.

தத்துப்புத்திரனுக்கே உரியன' என்று தீர்ப்புக் கூறி, அவர்களால் சாசனம் எழுதி வாங்கி வணிகமங்கையிடம் கொடுத்தனர். அப்போது தனபதியுருவம் தாங்கி வந்த சோமசுந்தரக்கடவுள் பலருங்காண மறைந்து தம் திருக்கோயிலுட் புகுந்தருளினர்.

வழுதி வணிகச்சிறுவனுக்கு வரிசை நல்கிச் சிவனடி சேர்தல்

இதனைச் சுந்தரேச பாதசேகர பாண்டியன் கேள்வியுற்றுத் தனபதியுருவங்கொண்டுவந்து திடீரென அனைவருங்காண மறைந்தவர், சோமசுந்தரக்கடவுள் என்று அறிந்து வியப்புற்று, வணிகச் சிறுவனுக்கு மகிழ்ச்சி மிக வரிசைகள் பல வழங்கினன். சிவபெருமானின் திருக்கோயிலைப் பொன்னினலே புதுப்பித்தான். சிலகாலஞ் சென்றபின் தன் மகனகிய வரகுண பாண்டியனுக்கு முடிசூட்டித் தன்னரசைக் கொடுத்து விட்டுச் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தான்.

செய்யுள் — 37
ஆகச் செய்யுள் 1962

———

## 40. வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம்

வரகுண பாண்டியன் தன்மை

[1]வரகுண பாண்டியன் ஞாயிறு, திங்கள், ஆன்மா, நிலம், நீர், நெருப்பு, வளி, வான் என்னும் எண்பகுதியின்[2] மயமாகிய சோமசுந்தரக் கடவுளை மனம், மொழி, மெய்யெனும் மூன்று கரணங்களினலும் மெய்யன்போடு வழிபடும் சிறந்த குணத்தினன்; மன்மதனை வென்ற அழகினன்; சூரியனைப்போன்ற மெய்யொளியினன்; வெற்றி பொருந்திய நூறு வேள்வியினைச் செய்த இந்திரனைப்போன்ற பெருஞ் சிறப்பினன். அவன் வேத முதலிய பல நூல்களையும், வேள்வி முதலிய பல

---

1. வரகுணன்- மேலாகிய குணமுடையவன்; இவனை முதலாம் வரகுண பாண்டியன் என்பர்.

2 எண் பகுதி– அட்ட மூர்த்தம். "இருநிலனய்த் தீயாகி நீரு மாகி இயமான னயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி ருகி ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி" என்பது அப்பர் தேவாரம்.

கருமங்களையும் வழுவாது நிலைபெறச் செய்தலால் நான்முகனைப் போல வும், அட்ட லட்சுமிகளால் இம்மை இன்பம் விளைய அரசு புரிவதால் சக்கரமும் சங்கும் ஏந்திய திருமாலைப் போலவும், மாறுபாட்டினைச் செய் யும் ஐம் பொறிகள், அந்தக் கரணங்கள் முதலிய பகையினை வெல்லும் ஒழுக்கத்தாலும், மெய்யுரையாலும், முற்று முணர்தலினாலும், எல்லா உயிர்களிலும் நிறைந்த சிவபெருமானைப் போலவும் விளங்கி உலகினைப் பாதுகாத்து வந்தான்.

வரகுண பாண்டியன் வேட்டைமீது சென்று மீளுதல்

ஒரு நாள் வரகுண பாண்டியன் வேட்டையாட விரும்பிக் காடும் மலையுமாகிய எங்கும் சென்று தீயினைக் கக்கும் கண்களையுடைய, புலி களையும், நீண்ட துதிக்கையினை நீட்டும் யானைகளையும், பன்றிகளையும் பிற விலங்குகளையும் சூரியன் அத்தமிக்கும் வரையும் வேட்டையாடி னான்; பிறகு மதுரை மாநகரத்தை நோக்கிக் காற்றினைப்போல் விரைந்து செல்லும் தனது கனவட்டம் என்னும் குதிரையின்மேல் திரும்பி வந்து கொண்டிருக்கும்பொழுது, அக்காட்டின்கண் வழியில் துயில் மயக்கங் கொண்டு சோர்ந்து முகத்தில் வியர்வை தோன்றப் படுத்து நித்திரை செய்யும் ஒரு அந்தணன்மேல் அக் குதிரை காலை வைத்து மிதித்து விட்டது. உடனே அவ்வந்தணன் இறந்து விட்டான். வரகுண பாண்டியன் அதனை அறியாது தன் அரண்மனையை அடைந் தனன்.

வரகுண பாண்டியனைப் பிரமகத்தி பற்றுதல்

அப்பொழுது குதிரையின் கால் பட்டு இறந்த பிராமணனுடைய உடலை அவன் சுற்றத்தாராகிய அந்தணர்கள் கொண்டுவந்து பாண்டியனுடைய கடைத் தலைவாயிலிலே போட்டு நிகழ்ந்ததைக் கூறினர். வரகுண பாண்டியன் அதனைக்கேட்டு வருந்தி அம் மறைய வர்களை அழைத்து அவர்கள் கையில் நிறைய பொற்குவைகளை அளித்து இறந்தவன் உடலை எடுத்துத் தகனஞ் செய்வித்து இறுதிக் கடன்களை முடிப்பித்தான். எனினும் அக் கொலைப் பாவம் பிரமகத்தியாக வந்து அவனைப் பற்றிக்கொண்டது.

பிரமகத்தியைப் போக்கப் பரிகாரம் புரிதல்

வரகுண பாண்டியன் தன்னைப் பிடித்து வருத்தும் பிரமகத்தி நீங்கும்பொருட்டுப் பிராயச்சித்தமாக அந்தணர்கள் கூறியபடியே

[1]ஐவகைப்பட்ட உணவினை ஆற்றங்கரையின்கண் வேதநூற் கேள்வி மிக்க அந்தணர்க்கு அளித்தான்; மும் மூர்த்திகளின் வடிவமாகிய அரச மரத்தைப் பிரதட்சிணஞ் செய்தான்; அறுகம் புல்லைக் கொய்து பசுக்கள் உண்ணக் கொடுத்தான்; அகமருடண மந்திரத்தால் ஓமம் புரிந்தான்; பஞ்சகவ்வியமும், பசுவின் கொம்பு தோய்ந்த தீர்த்தமும் உட்கொண்டான்; பல வகையான தானங்களைச் செய்தான். அப்பழி சிறிதும் நீங்காத வலியினையுடையதாய் நெய் சொரிந்த அக்கினியைப்போல மேலிட்டு அவன் கண்ணுக்குப் புலனும்படி சூழ்ந்து கொண்டது.

பிரமகத்தி துன்புறுத்தல்

அந்தப் பிரமகத்தி ஏங்கும்; பெருமூச்சு விடும்; கை தட்டும்; மலைபோல் வளரும்; அணுவாகச் சிறுகும்; சினந்து ஆரவாரம் செய்யும்; முன்னிலும், பின்னிலும் இரு புறங்களிலும் தொடரும்; சிரிக்கும்; பிளந்த வாயை மெல்லும்; சிறிது விலகும்; பின் நெருங்கும்; ''பழிதா'' என எதிர்ந்து வரகுணனைப் பிடிக்கும்.

பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை வேண்டுதல்

அப்போது வரகுண பாண்டியன் மாசுபடிந்த மாணிக்கம் போலவும், இராகு என்னும் பாம்பின் வாய்ப்பட்ட தண்மதியினைப் போலவும் பொலிவு குன்றி, யானையுண்ட விளங்கனி போல் உள்ளீடில்லாத மனமுடையவனுனன். மீண்டும் கொலைப் பாவம் நீங்காது ஓங்கி வளரும் தன்மையைக் கண்ட மறையோர்கள் பாண்டியனை நோக்கி, ''அரசே! நீ விரத நியமத்துடன் நாடோறும் சோமசுந்தரக் கடவுளை ஆயிரத்தெட்டுத் தரம் பிரதட்சிணஞ் செய்யக் கடவாய்; இவ்வாறு பத்து நாட்கள் செய்துவரின் இப்பிரமகத்தி நீங்கும் வண்ணம் சிவபெருமான் உனக்கு வழிகாட்டியருளுவர்'' என்று கூறினர். அது கேட்ட வரகுண பாண்டியன் திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி, '' கங்கையைத் தாங்கிய எம் பெருமானே! தேவரீர் இந்திரனுடைய பழியைத் தீர்த்தருளினீர்! மறையோனுடைய மாபாதகத்தைப் போக்கியருளினீர்! அதுபோல அடியேனைப் பற்றி வருத்தும் கொலைப் பழியினையும் தீர்த்தருளும் '' என்று விண்ணப்பஞ் செய்து அடியற்ற மரம்போல் நிலத்தில் வீழ்ந்து வணங்கினுன்; பின்பு அந்தணர்கள் கூறியபடியே ஆயிரத்தெட்டு பிரதட்சிணஞ் செய்து துதித்தான்.

---

1. ஐவகைப்பட்ட உணவு-இவை கறிப்பன, நக்குவன, பருகுவன, விழுங்குவன, மெல்லுவன என்பன.

### இறைவன் விண்மொழியாகப் பாண்டியனுக்கு அருளுதல்

அப்பொழுது சிவபெருமானின் திருவருளினாலே ஆகாயத்தினின்றும், ''பாண்டியனே! ஒவ்வோர் அடிக்கு ஒவ்வோர் அசுவ மேத யாக பலன் கொடுப்பது பிரதட்சிணம்; அத்துணைச் சிறப்புடைய பிரதட்சிணம் நாள் ஒன்றுக்கு ஆயிரத்தெட்டுச் செய்து வந்தாய்; அதனாலே நாம் மிக மகிழ்ந்தோம்; இனி நீ அஞ்சாதே! காவிரி நாடனாகிய சோழ மன்னன் நின்னோடு போர் செய்யக் கருதி வருவான்; நீயும் அவனை எதிர்ப்பாய், அப்போரிலே சோழன் உனக்குப் புறங்காட்டி ஓடுவான்; நீயும் அவன் பின்னேயே ஓடி அவனை எட்டிப் பிடிப்பவன் போலத் துரத்தும்பொழுது நம்மை நாமே பூசித்துக் கொண்டிருக்குந் தலமாகிய [1]திருவிடை மருதூரை அடைவாய்; அங்கு உனது கொடிய பழியை நீக்கியருள்வோம்'' என்று ஓரசரீரி வாக்குத் தோன்றிற்று. வரகுண பாண்டியன், அது கேட்டு மனமகிழ்ந்து சோமசுந்தரக் கடவுளின் திருவருளைத் துதித்து வணங்கிக் கொண்டு தன் அரண்மனையை அடைந்தான்.

### வரகுணன் சோழனோடு போர்புரிந்து துரத்திச் செல்லல்

சிலநாள் கழிந்தபின் ஆத்தி மாலையை அணிந்த முடியுடைய சோழன் ஒருவன் வரகுணபாண்டியனுடன் போர் புரியக்கருதிப் புவியை மறைக்கும்படி புலிக்கொடியை உயர்த்தித் தனது பெரிய சேனையோடு கடல் நிலைபெயர்ந்து வந்தாற்போல் முரசங்கள் முழங்க வந்து பாண்டி நாட்டினை வளைத்தான். அதனைக் கண்ட மீனக் கொடியை உயர்த்திய பாண்டியன் தன் சேனையோடு பாற்கடலைக் கடைய

---

1. திருவிடை மருதூர் - இது மூவர் தேவாரப் பாடல் பெற்ற பெருமையுடைய சிவ ஸ்தலம். இத்தலம் வடநாட்டில் உள்ள மல்லிகார்ச்சுனம் (ஸ்ரீசைலம்) என்ற சீபர்ப்பதத்திற்கும், தெற்கே பாண்டி நாட்டிலுள்ள திருப்புடைமருதூர் என்ற தலத்திற்கும் இடையில்உள்ளதால் இடைமருது எனப் பெயர்பெற்றது. இம் மூன்று தலத்திற்கும் தலமரம் 'மருது' ஆகும். (அருச்சுனம்-மருது). இத்தலத்திற்குப்பரிவார சந்நிதிகளாக விநாயகர் சந்நிதி திருவலஞ்சுழியாகவும், முருகர் சந்நிதி சுவாமி மலையாகவும், நடராசர் சந்நிதி சிதம்பரமாகவும், தட்சிணாமூர்த்தி சந்நிதி ஆலங்குடியாகவும், சண்டீசர் சந்நிதி திருச்சேய்ஞலூராகவும், வைரவர் சந்நிதி சீகாழியாகவும், நவக்கிரகக் கோயில் சூரியனார் கோயிலாகவும் தனிச் சிறப்புடன் தனித்தலங்களாக ஆங்காங்கு அமைந்துவிளங்குதல் இதன் பெருமையினைப் புலப்படுத்தும்.

எழுந்த மந்தர மலையைப்போல் எழுந்து கலக்கிப் போரிட்டான்; அப்போது சோழனுடைய படைகள் நிலைகலங்கித்தோற்றோடின. சோழனும் போருக்காற்றாது தோற்றுப் புறமுதுகு காட்டி மனம் வெள்கி ஓடினான். மீனக்கொடியோனாகிய வரகுண பாண்டியன் அங்ஙனம்ஓடிய சோழனை விடாது பின்தொடர்ந்து துரத்திச் சென்றான்.

### வரகுணன் திருவிடைமருதூர் சென்று வழிபடல்

வரகுண பாண்டியன் சோழனைப் பிடிக்கும் பொருட்டுத் துரத்திக் கொண்டோடும்போதுத் தேன்சிந்தும் மணங் கமழும் முல்லை மலரையும் தாமரை மலரையும் ஏந்திக் கழிசூழ்ந்த நெய்தல் நிலத்துச் சோலையின் மருங்கில் இறால் மீனின் புலால்நாற்றத்தைப் போக்கும் குளிர்ந்த நீர்த் துறையையுடைய காவிரியை அடைந்தான்; [1]பூசத்துறை என்னும் அத் துறையிற் சென்று நீராடி, அக் காவிரியின் தென் பக்கத்தில் மணமிக்க பெருமை பொருந்திய திருவிடைமருதூரில் எழுந்தருளிய மகாலிங்கப் பெருமானை வணங்கத் திருக்கோயிலினது கீழ்த்திசை வாயிலைக் கடந்து உள்ளே சென்றான். அப்போது அவனைத் தொடர்ந்து செல்ல இயலாத பாசத் தளையும், கொலைப் பழியும் புறத்தே நின்றுவிட்டன. உள்ளே சென்ற பாண்டியன் வேதமாகிய வண்டுகள் சூழ்ந்து ஒலிக்கத்தெய்வத் தன்மை பொருந்திய இடைமருதிலே குடிகொண்ட பெருந் தேனைத்[2] தன் கண்களாகிய வாயைத் திறந்து பருகி அதிலே தோய்ந்து அனல் வாய்ப்பட்ட வெண்ணெயாலாகிய பாவைபோல் உருகிச் செயலும் வாக்கும் அற்று உணர்ச்சியுருவமாகி நெடுநேரம் நின்றான்.

---

1. பூசத்துறை-இது தை மாதம் பூச நட்சத்திரத்தில் மருத வாணர் ஆடும் திருக்காவிரித்துறை தீர்த்தம் ஆகும்; இதன் சிறப்பினை ''பூசம் புகுந்தாடிப்பொலிந்தழ காய, ஈசன் உறைகின்ற இடைமருதீதோ'' (திருஞானசம்பந்தர் தேவாரம்) எனவும், ''ஈசனெம்பெருமானிடை மருதினில், பூச நாம்புகு தும்புனல் ஆடவே'' (திருநாவுக்கரசர்தேவாரம்)எனவும் வருவனவற்றால் அறியலாம்.

2. இங்கு மருத மரத்தடியில் விற்றிருக்கும் பெருமானை மருத மரத்திலுள்ள தேனாகவும் தேவ ஒலியை வண்டுகளின் ஒலியாகவும் கூறப்பெற்றுள்ளன. (மரத்தின் பொந்தில் தேன் கூடு கட்டி இருத்தல் காண்க.) ''அந்த விடைமருதில் ஆனந்தத் தேனிருந்த, பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ'' என்பது திருவாசகம். இத்தேன் நினைத்தொறும், காண்டொறும், பேசுந்தொறும், எப்பொழுதும் இன்பம் செய்வதாம்.

சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழறத் தெய்வ
மருதிற் சிறந்த பெருந்தேனைக்கண் வாயங் காந்து
பருகிப் படிந்து தழல்வாய் வெண்ணெய்ப் பாவை யொப்ப
உருகிச் செயலற்(று) உரையற்(று) உணர்வாகி நின்றான்.

பின்பு, ''நிராமயனே! பேரின்பத் திருக் கூத்தனே! நான்மாடக் கூடலில் வீற்றிருக்கும் பராபரனே! இமையா முக்கட் பகவனே; பார்ப்பதி மணாளனே! பழம் பொருளே! அகில நாதனே! புண்ணியனே! மருதவாணனே! அராவணிசடையனே!'' என்று மகாலிங்க மூர்த்தியைப் பலவாறுகத் தோத்திரஞ் செய்தான்.

பிரமகத்தி கீழை வாயிலில் தங்கிவிடுதல்

அப்பொழுது சொற்பதங் கடந்து நின்ற சோதிவடிவான பெருமான், வரகுண பாண்டியனை நோக்கி, ''மற்போரில் வல்ல பெருந் தோளாய்! உன் பிரமகத்தி கீழை வாயிலிலே நிற்கின்றது ஆதலால், நீ அவ்வழியாலே போகாதே; மேலைவாயில் வழியாக நம் மதுரைப் பதிக்குச் செல்வாயாக'' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

வரகுண பாண்டியன் அதனைக்கேட்டு இறைவன் வீற்றிருக்கும் இடைமருதினை வலம் வந்து பிரிதலாற்றமையால் வாயில்கள் தோறும் அடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து வணங்கி மேலை வாயிலால் போவானாயினன்; அப்போது அவன் சில நாள் அங்குத் தங்கி [1]மேலைக் கோபுரத்தைத் தன் பெயரால் கட்டினன்; வேறு பல திருப்பணிகளையும் செய்துமுடித்தான்[2]; அதன் பின்னர் தென்றிசை நோக்கிச் செல்லுங்கால் வழியிலுள்ள திருக்கோயில்களில் எழுந்தருளிய சிவபரம்பொருளை வணங்கித் துதித்துக்கொண்டே மதுரையை அடைந்தான்.

---

1. மேலைக் கோபுரம்-இது பாண்டியன் கோபுரம் என வழங்குகின்றது.

2. வரகுண பாண்டியன் இடை மருதில் திருப்பணிகளைப் புரியும் போது அவனது அன்பின் பெருக்கும் திருத்தொண்டின் திறமும் அளவிடற்கரியனவாகும். இதனை, 'வெள்ளை நீறு மெய்யிற் கண்டு, கள்ளன் கையிற் கட்டவிழ்ப்பித்தும், ஓடும் பல்நரி ஊளைகேட்(டு) அரனைப், பாடின என்று படாம்பல அளித்துப், குவளைப் புனலில் தவளை அரற்ற ஈசன் தன்னை ஏத்தின என்று, காசும் பொன்னும் கலந்து தூவியும், வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய, செழுவிதை எள்ளைத் தின்னக்

### சிவலோகம் காண விழைதல்

பிறகு வரகுண பாண்டியன் தன்னை விடாது தொடர்ந்த பிரமகத்திப் பழியைப் போக்கிக் காத்தருளிய சோமசுந்தரக் கடவுளை நாடோறும் அடைந்து தரிசனம் செய்து கொண்டும், உலக முழுவதும் நீதி தவறாது செங்கோலோச்சிக் கொண்டும் இறைவன் புகழை அறிஞர்களைக்கொண்டு கேட்டுக்கொண்டும் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் வேதம், ஆகமம், புராணம், மிருதிகள் முதலாய நூல்கள் அனைத்தும் 'உலகங்களில் மேம்பட்டது சிவலோகம்' என்று சொல்வதை மனத்திற்கொண்டு அந்தச் சிவலோகத்தைக் காண்டற்கு ஆசை கொண்டு அன்றிராத்திரியிலே (சிவராத்திரியிலே) திருக்கோயிலை அடைந்து, சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "எம்பெருமானே! எழு பிறப்பையுங் கடந்து உம்முடைய நிழலைப் பெற்ற மெய்யன்பர்கள் சூழத் தேவரீர் சிவலோகத்தில் எழுந்தருளியிருப்பதைத் தரிசித்து வணங்க அடியேன் ஆசை கொண்டேன்" என்று விண்ணப்பஞ் செய்தான்.

### திருநந்தி தேவர் பாண்டியனுக்குச் சிவலோகங் காட்டல்

உடனே சிவபெருமான் வரகுண பாண்டியன் அன்பிற்கு எளியவராகி, "நாம் இன்றைக்கு அச் சிவலோகத்தை இவ்வுலகத்தில் வருவித்து இவ்வன்பனுக்குக் காட்டுவோம்" என்று திருவுளங் கொண்டருளினர். அப்பொழுது சோமசுந்தரக் கடவுளின் திருவுள்ளத்தை அச் சிவலோகம் உணர்ந்து, சூரிய சந்திரர்களின் சுடர்கள் மின்மினிப்பூச்சி போல் ஒளி மழுங்கக் கோடி சந்திரர்கள் பேரொளி பரப்பி ஒருங்குதித்தாற்போல, விண்ணினின்றும் இறங்கித் தோன்றியது. சோமசுந்தரக் கடவுள் திருநந்திதேவரை அழைத்து "நமது மெய்யன்பனாகிய வரகுண பாண்டியன் நமது உலகத்தைக் காண விரும்பினான்; ஆதலின், அவனுக்குக் காட்டுக" என்றார்.

---

கண்டு, பிடித்தலும் அவனிப் பிறப்புக்(கு)என்ன, இடித்துக்கொண்டவன் எச்சிலை நுகர்ந்தும், மருத வட்டத்(து)ஒருதனிக் கிடந்த, தலையைக் கண்டு தலையுற வணங்கி, உம்மைப் போல எம்மித் தலையும், கிடத்தல் வேண்டும் என்(று) அடுத்து அடுத்(து) இரந்தும், கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப, வாய்த்தன என்று நாய்க்கட்டம் எடுத்தும், காம் புகுத்(து)உதிர்ந்த கனியுருக் கண்டு, வேம்புகட்(கு)எல்லாம் விதானம் அமைத்தும், விரும்பின கொடுக்கை பரம்பரற்(கு) என்று, புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய அன்பின் வரகுண தேவரும்" என வரும் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையின் அடிகளால் நன்கு அறியலாம்.